# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை



சிலம்பு-௫௨ வள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, வைகாசி June, 78 பரல்-௯

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ00௯, வைகாசி | பரல் |
|---|---|---|
| ௫உ | சூன் 1978 | ௯0 |

## தமிழில் அறிவியல் நூல்களை ஆக்கும் முறைபற்றிய கருத்தும் விளக்கமும்

செல்வியின் சென்ற பரலில் தமிழில் அறிவியல் நூல்கள் ஆக்கும் முறைபற்றி எழுதியிருந்ததோடு அக் கட்டுரை பற்றிக் கருத்துத் தெரிவிக்குமாறு அறிஞர்கட்கு வேண்டுகோள் விடுத்திருந்தோம். அவ் வேண்டுகோட்கு இணங்கி அறிஞர்கள் சிலர் தத்தம் உள்ளக்கிடக்கையைத் தெரிவித்துள்ளனர்.

உயர்திரு. மு. ரா. பெருமாள் முதலியார், எம்.ஏ., எல்.டி., அவர்கள் மேற்படி கட்டுரையை உளமார வரவேற்று எழுதி யிருப்பதுடன் தாம் 1972இல் 'புதிய முத்தமிழ்' என்னுந் தலைப்பில் எழுதிய கட்டுரையொன்றையும் விடுத்துள்ளார்கள். அக் கட்டுரை அவர்கள் விருப்பப்படி அடுத்த பரலின்கண் வெளியிடப்பெறும். அங்ஙனமே புதுவையைச்சேர்ந்த திருவாளர் பசுபதி அவர்களும் இக் கருத்தை வரவேற்று எழுதியுள்ளனர்.

உயர்திரு. பி. எல். சாமி அவர்கள் அறிவியல் துறைகளில் பல சொற்களைத் தமிழ்ப்படுத்த முடியுமென்றும் முடியாத சொற்களை அவ்வாறே கையாளலாமென்றும் கூறியிருப்பதுடன் ஈபுரு மொழியை இசுரயேல் நாடு திட்டமிட்டு முயன்று வியத்தகு நிலையில் வளர்த்து அறிவியல் மொழியாக்கியிருப்பது போல் நாமும் திட்டமிட்டுக் கலைச்சொல்லாக்கத்திற்கெனத் தக்க அறிஞர்களை அமர்த்தி, அரசியலுக்கு அப்பாற்பட்ட நிலையில் தமிழை வளர்த்தல் வேண்டுமென்றும் குறிப்பிட்டுள்ளார்கள்.

மதுரையைச் சேர்ந்த புலவர் திரு. சேதுராமன் அவர்களும், திருச்சிவாணரான புலவர் திரு. இராமச்சந்திரன் அவர்களும் பிற மொழிகளில் உள்ள குறியீடுகளை அவ்வாறே கையாளுவது

தவறென்றும், தக்க அறிஞர் குழுவை அமர்த்தியும், ஆர்வமுள்ளவர்களை ஊக்கியும் தமிழில் கலைச்சொற்களை உருவாக்குவதே தக்கதென்றும், அதுவே கடைப்பிடிக்கற்பாலதென்றும் வலியுறுத்தியுள்ளனர். இவ்வாறே மற்றுஞ் சிலரும் கருதுகின்றனர்.

பலதுறை நூல்களையும் தூய தனிச்செந்தமிழில் ஆக்க வேண்டும் என்பதே நம்முடைய நோக்கம். அறிவியல் துறைகளுக்குத் தேவையான கலைச்சொற்களைத் தமிழில் ஆக்குதல் இன்றியமையாததும் அடிப்படையானதுமான அரிய பெரிய முயற்சியாகும். இதனை அரசும் பல்கலைக் கழகங்களும் தலையாய தொன்றாகக் கருதித் தக்க அறிஞர்களைக்கொண்டு தனிப்பெருந் துறையாக வளர்த்து நிலையாகப் பணிசெய்துவருதல் வேண்டும். இதுகாறும் அத்தகைய நிலை நிறைவடையத் தக்கவண்ணம் அமையவில்லை என்பது வருந்தத்தக்கது.

பெருந் தொழில்நிறுவனங்களின் உரிமையாளர்கள் அல்லது பெருஞ்செல்வர்கள் ஊக்கத்துடன் முன்வந்து இக் கலைச்சொல்லாக்கப் பணியை மேற்கொண்டு செய்யின் நன்று. தமிழ்நாட்டரசிடமும், பல்கலைக் கழகங்களிடமும், பிற மாநில அரசுகளிடமும், நடுவணரசிடமும் ஒன்றிய நாடுகளின் கல்வி அறிவியல் பண்பாட்டுக் கழகம் முதலியவற்றினிடமும் தக்கவாறு முயன்று பொருளுதவி பெற்றுச் சிறப்புறச் செய்யலாம்.

1923 ஆம் ஆண்டில் அப்பொழுதைய சென்னை மாநில அரசு தென்னிந்திய மொழிகளில் கலைச்சொற்கள் ஆக்குதற் பொருட்டு ஒரு குழுவை அமர்த்தியது. ஆனால், அது செம்மையாக நடைபெற்றுப் பயன்விளைக்கவில்லை. 1934 இல் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தினர் கலைச்சொல்லாக்கப் பணியை மேற்கொண்டு, 1936 இல் ஒரு மாநாடும் கூட்டிக் கலைச்சொற்கள் என்னும் நூல் ஒன்றையும் வெளியிட்டனர். 1941 ஆம் ஆண்டு இந்தியா முழுமைக்கும் ஒரே வகையான கலைச்சொற்களை ஆக்கவேண்டும் என்னும் நோக்கில் வடமொழியை அடிப்படையாகக் கொண்ட கலைச்சொற்களை உருவாக்க முனைந்தனர். அதற்கு அப்போதைய அறிஞர் பெருமக்கள் பலர் கண்டனம் தெரிவித்தனர். இது பற்றிய செய்திகளைச் செந்தமிழ்ச் செல்வி 19 ஆம் சிலம்பிலே காணலாம். மொழிப் பேரறிஞர் தேவநேயப் பாவாணர் அவர்களின் கலைச்சொல்லாக்க நெறிமுறைகள் பற்றிய கட்டுரை செல்வி 19 ஆம் சிலம்பில் வெளியிடப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் வாழ்வோர் அனைவரும் தமிழ்ப்பற்றும் தமிழ் வளர்ச்சியில் அக்கறையும் உடையவராயிருப்பின் நன்று. ஆனால், அந் நிலை இல்லை. தமிழ்மக்கள் அனைவருக்குமாவது

பெரும்பான்மையர்க்காவது தமிழுணர்வு இருப்பினும் தாழ்வில்லை. அந்தோ! அந் நிலையுமில்லை. தமிழ்வளர்ச்சியில் ஆர்வமும் ஈடுபாடும் உடையவர்கள் என்றாலே தமிழ்நாட்டில் வாழ்வோர், தமிழர்களே மாறுபட்டு நோக்கும் சூழலே இருந்து வருகின்றது. இத்தகைய ஒரு வருந்தத்தக்க நிலை உலகின் வேறு எம் மொழிக்கும் இருப்பதாகத் தெரியவில்லை. இவ்வாறிருத்தலால் தன்னை நிலைப்படுத்திக்கொள்ள எண்ணுகின்ற அரசு தமிழுக்குச் சார்பாக இருந்து ஆக்கப் பணிகளை முனைந்து செய்வது ஒருவகை இடர்ப்பாடாகவே உள்ளது. பல்கலைக் கழகங்களின் நிலையும் அத்தகையதே எனலாம்.

இறந்த மொழி என்று கருதப்பட்ட ஈபுரு மொழியை இசுரயேல் நாட்டினர் 25 ஆண்டுகளில் வளர்த்து வியக்கத் தக்க நிலையில் அறிவியல் மொழியாக வளப்படுத்தியுள்ளனர். ஒருமுகமான செயல்முறையும் தன்னுணர்மையும் வாய்ந்த அந் நாட்டு நிலைவேறு; இந்தியாவின் ஒரு மாநிலமாய் அமைந்து பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும், கொல் குறும்பும் நிறைந்த தமிழ்நாட்டின் நிலைவேறு என்பதை அன்பர்கள் ஆழ்ந்து எண்ணிப்பார்த்தல் வேண்டும்.

தமிழ் வளமுடைய மொழியாய் இருந்தும், அதனை அறிவியல் துறைகளில் தழைக்கச் செய்தற்கு உருப்படியான திட்டமும் நிறுவனமும் இல்லை. பன்மொழியறிவும், அறிவியல் திறனும் வாய்ந்த அறிஞர்கள் வளர்க்கப்பெறவில்லை; ஊக்கப் படுத்தப்பெறவில்லை. திரு. பி. எல். சாமி அவர்களும் இவ்வாறு கருத்துத் தெரிவித்துள்ளார்.

வண்ணனை மொழியியல் துறை இன்று உலகில் வளர்ந்து வருகின்றது தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களும் இத் துறைக்கென ஏராளமான பொருளைச் செலவிடுகின்றன. மொழியறிவியல் என்னும் அளவில் அத் துறையறிவு தேவையே எனினும் அதனால் விளையும் பயனையும், தமிழின் இயல்பையும், இற்றைத் தமிழின் நிலையையும் நோக்கின் வண்ணனைமொழித் துறைக்குச் செலவிடப்படும் பெருந்தொகை மிகையெனவே கருதவேண்டியுள்ளது. அவ்வாறே திருக்குறளாராய்ச்சி என்னும் பெயரில் மூன்று பல்கலைக் கழகங்களிலும் இருக்கைகள் நிறுவப்பட்டுள்ளன. ஒரு பல்கலைக் கழகத்தில் மட்டும் ஆராய்ச்சியை வைத்துக்கொண்டு, ஏனை இரண்டிலும் வேறுவகையான திருக்குறட் பணிகளைச் செய்யலாம்.

திருக்குறளைப் பல்வேறு மொழிகளில் மொழிபெயர்ப்பதுடன் அவ்வம் மொழிகளில் சிறந்த நூல்களிலிருந்தும் உலகப் பெருநூல்களிலிருந்தும் மேற்கோள்கள் எடுத்து

விளக்கி நூலாக்கி வெளியிடுதல் வேண்டும். ஆழ்ந்த புலமை வாய்ந்த தமிழறிஞர்கள் வேறு மொழிகள் பயிலத் தக்க உதவி யளித்துச் சிறப்புப் பட்டங்கள் வழங்கி அவ்வம்மொழி வழங்கும் நாடுகட்குச் சென்று திருக்குறட் பணியாற்ற ஆவன செய்தல் வேண்டும். வெளி நாட்டுப் பேரறிஞர்கள் தமிழ் பயில வாய்ப்பும் உதவியும் அளித்து ஊக்குவித்தல் வேண்டும். இன்னோரன்ன பணிகள் திருக்குறளுக்குச் செய்யவேண்டியனவாகும்.

அண்மையில் சென்னைப் பல்கலைக் கழகத்தினர் தமிழ் அறிவியல் பயிற்றுமொழியாதற் கேற்பவும், உடனடியான தேவை கருதியும் ஆங்கிலத்தில் உள்ள கலைச்சொற்களையே பயன்படுத்தி அறிவியல் நூல்களைத் தமிழில் வரையத் திட்ட மிட்டிருப்பதாகவும், தமிழில் அறிவியல் நூல்கள், ஆக்கப்பட வேண்டும் என்னும் நோக்குடன் கோவையில் கடந்த பல ஆண்டுகளாகக் "கலைக்கதிர்" என்னும் இதழைத் தொடர்ந்து நடத்திவரும் அவ்விதழின் ஆசிரியர் திரு தாமோதரன் அவர்கள் தலைமையில் பயிற்றுமொழித் திட்டக் குழுவொன்று அமைத் திருப்பதாகவும் அறிந்து மகிழுகின்றோம்.

பயிற்றுமொழித் திட்டக்குழு தக்கவர்களைத் துணைக் கொண்டும் ஊக்கியும், இத் துறையில் மேலும் பற்பலர் உருவா தற்குரிய வாய்ப்பும் பயிற்சியும் அளித்தும் செம்மையாக இயங்கிச் சிறப்புறப் பணியாற்றும் என்று நம்புகின்றோம்.

அறிவியல் முன்னேறியுள்ள நாடுகளில் புத்தம் புதிய அறி வியல் செய்திகளைத் தாங்கிய இதழ்கள் எத்தனையோ வெளி வந்துகொண்டிருக்கின்றன. அத்தகைய இதழ்கள் சிலவேனும் தமிழில் வெளிவாராமை பெரிதும் வருந்தத்தக்கது. கீழான உணர்ச்சிகளைத் தூண்டும் கதைகளைப் படங்களுடன் வெளி யிட்டு மக்களைப் பாழான வழியிற் செலுத்தும் இழிதகை இதழ்கள் பலப்பலவாய்ப் பெருகிப் பன்னூறாயிரக் கணக்கான படிகள் விற்பனையாகிக் கொண்டிருக்கின்றன. ஆனால், அறி வியல் இதழாகக் கலைக்கதிர் மட்டுமே தொடர்ந்து வெளிவரு கின்றது. அதுவும் குறைந்த படிகளே அச்சிடப்பெறுவதாக அறிகின்றோம். 'தினமணி'யில், அவ்விதழின் நடையில் சிற் சில அறிவியல் கட்டுரைகளும், 'தென்மொழி'யில் செந்தமிழ் நடையில் சிற்சில அறிவியல் கட்டுரைகளும் அவ்வப்போது வெளிவருகின்றன. 'செந்தமிழ்ச் செல்வி' இலக்கிய இதழே யாயினும் சங்க காலத் தமிழ் நூல்களில் பொதிந்திலங்கும் அறி வியல் கருத்துக்களை வெளியிட்டுவருகின்றது. அறிவியல் இதழ்களை ஊக்குவிப்பது அரசின் தனிப்பெருங் கடமையாகும்.

வ. சு.

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ருஉ, பரல் அ, பக்கம் ௪௦௩-இன் தொடர்ச்சி)

சத்தே அசத்தை அறியும் என்னும் 'சிவாத்துவித' சைவரையும், அசத்தே சத்தை அறியும் என்னும் 'சிவசங்கிராந்தவாத' சைவரையும், இரண்டு பிரிவுகளும் மறுத்துவிடுகின்றன.

சத்தையும் அசத்தையும் அறிந்து நுகர்ந்து உய்வதற்கு ஏற்றபடி இவ்விரண்டிற்கும் வேருக உயிர் என்னும் மூன்ருவது பொருள் இருக்கவேண்டுமென்று, நூற்பாவின் மூன்ருவது பிரிவு நிலைநிறுத்துகிறது. அசத்தை நுகரும்போது அசத்தாகவும் சத்தை நுகரும்போது சத்தாகவும் இருப்பதனுல், அது 'சதசத்'தெனப்பட்டது. பிறவியிலும் பிறவி விடுதலையிலும் இரண்டையும் நுகர்ந்து உய்வது உயிர். சத்தும் அசத்தும் வேறு வேருய் இருப்பதனுல் 'இருதிறன் அறிவுளது' என்றும், அந்த இரண்டும் அல்லாத ஆன்மா மூன்ருவதாய் இருப்பதனுல், 'இரண்டலா ஆன்மா' என்றும், மேற்கோளில் வந்தது. அதன் பொழிப்புரையும் அவ்வாறே விளக்கியது.

இருதிறன் என்பதை இருதிறனே என இரண்டாம் வேற்றுமைப் பொருளில் உரைத்துக் கொள்க. 'இரு திறனுல்' எனவும், 'இருதிறனிலும்' எனவும் முறையே மூன்ருவது ஏழாவது வேற்றுமைகள் விரித்துப் பொருளுரைத்துக் கொள்ளுதலும் பொழிப்புரையில் வந்தது.

உயிர் அறிவிக்க அறியும் என்னுமல் தானே அறிவது என்று கூறினுல் என்ன என்பவர் 'சிவசமவாத' சைவர். 'ஈசுவர அவிகார வாதர்' 'ஐக்கிய வாதர்' என்பவர் கருத்தும் அது. இதைப்போல எண்ணமுடையோர் பிறரும் இருப்பர். உயிர் இருதிறனுலும் அறிவு பெறுவதனுல் என மூன்றும் வேற்றுமைப் பொருளிலும் உரைப்பது, அவரை மறுப்பதற்கு உதவி செய்யும்.

அசத்தோடு கூடி அசத்தாயும் சத்தோடு கூடி சத்தாயும் உயிர் இருப்பதனுல் அவற்றின்பால் உள்ள தன்மைகளை உயிர் ஏற்கிறது என்று ஏழாம் வேற்றுமைப் பொருளில் உரைப்பது, வேறு சிலர் கருத்துக்களை மறுக்க உதவும்.

'பாடாணவாத சைவர்', 'பேதவாத சைவர்' என்பவரெல்லாம், உயிருணர்வு சத்தோடு கூடுவதில்லை என்பர்.

சத்தோடு கூடுவதானால் சத்தாகவே ஒன்ருய்ப் போகும்; சத்தின்பால் தனியாக உயிர் இருப்பதில்லை என்று 'சுத்த சைவர்' உரைப்பர்.

இவையெல்லாம், 'இருதிறன் அறிவுளது' என்பதனாலும், 'இரண்டலா ஆன்மா' என்பதனாலும் மறுக்கப்படுகின்றன. உயிர் இருதிறத்திலும் சார்ந்து சார்ந்ததன் வண்ணமாகி அறிவும் உணர்வும் மிகும் என ஏழாம் வேற்றுமையிற் கூறிக் கொள்வது இம் மறுப்புக்கு உதவுகிறது; வேற்றுமை உருபுகள் விரிப்பதிலும் இங்ஙனம் இரட்டுற மொழிதல் அமைந்தது.

இரண்டையும் அறிந்து உய்வது என்று உயிர் கூறப்படுவதனால், உயிர் இவ் விரண்டிற்கும் வேருயிற்று. இதற்கு ஏற்ற உவமை, இருள் தன்மையும் ஏற்று ஒளித் தன்மையும் ஏற்று இவ்விரண்டும் அல்லாமல் வேருயிருக்கும் கண் என்பது பொருந்தும். 'இருளொளி அலாக் கண் தன்மை' என்று சிவப்பிரகாசமும் கூறும்.

விண்ணிலிருந்து அதன் தன்மையாக ஓசை உண்டாவது இயல்பு; ஆனால், 'கை தட்டல்' முதலிய காரணங்கள் நேரும் போதுதான், அப்படி உண்டாகும். அதுபோலக் கடவுளின் அறிவிப்பு என்னும் காரணம் உண்டாகி அறிவிக்க, உயிரின் அறிவு வெளிப்படுகிறது. கட்டு நிலையில் உலகத்தின் வாயிலாகவும் உயிரின் அறிவு வெளிப்படும். இப்படி வாய்ப்பு நேரும் போது உயிரினிடத்தில் இயல்பாக அமைந்திருக்கும் சிற்றறிவு வெளிப்படுகின்றது.

மலரில் மணம் மறைந்திருந்து பின்பு விளங்குவதுபோல உயிரினிடத்தில் அறிவு மறைந்திருந்து, காரணம் உண்டாகும் போது வெளிப்படுகிறது.

சார்ந்ததன் வண்ணமாய் அழுந்தும் தன்மை உயிர்க்கு இருப்பதனால், அப்படி வெளிப்படும் உயிரின் அறிவு படிகம்—போன்றதாய் இருக்கவேண்டுமென்றும் தோன்றுகிறது.

இவ்வியல்புகளை விளக்குவதற்கு இம் மூன்ரும் பிரிவில் ஓர் எடுத்துக்காட்டுச் செய்யுள் வருகின்றது.

> "அருஉருவன் தான்அறிதல் ஆய்இழையாய் ஆன்மா!
> அருவுருவம் அன்ருகும் உண்மை—அருவுருவாய்த்
> தோன்றி உடன்இல்லாத, தோன்ருத தில்லாத
> தோன்றல் மலர்மணம்போல் நோக்கு."

பொருள்:

ஆய் இழை ஆய் ஆன்மா - நுண்ணிய நூல்களை ஆராய்கின்ற உயிர்; அருவுருவந் தான் அறிதல் அருவுருவம் அன்ருகும் - அருவும் உருவுமாகிய சத்தையும் அசத்தையும் அறிவதாதலால் அவ்விரண்டும் அல்லாததாகும்; உண்மை - ஆன்மாவின் உண்மை இயல்பு; அரு உருவாய்த் தோன்றி உடன் நில்லாது - சத்தும் அசத்தும் போல விளக்கமாய்த் தோன்றி உடன் நிற்பதன்று; தோன்ருது நில்லாது - விளக்கமாய்த் தோன்ருமல் நிற்பதும் அன்று; மலர் மணம் போல் தொக்குத் தோன்றல் - மலர்களில் தோன்றும் மணம் போல் அவ்விரண்டிலும் அடக்கமாய் இருந்துகொண்டு சார்ந்ததன் வண்ணமாய் மறைந்து தெரிவதாகும்.

சுட்டறிவிற்கு எட்டாமையால் சத்து 'அரு' எனப்பட்டது; சுட்டறிவிற்கு எட்டுதலால் அசத்து 'உரு' எனப்பட்டது. ஆரும் நூற்பாவிலும் 'உரு அசத்து' என்று வந்தது.

இழை என்பது நூல்; சாத்திர நூல். ஆய் இழை என்பதில் ஆய் என்பது நுட்பம் உணர்த்தும்: "ஆய்தல் உள்ளதன் நுணுக்கம்'' என்பர் தொல்காப்பியர். 'ஆய் ஆன்மா' எனக் கூட்டி நூல்களை ஆராய்கின்ற ஆன்மா எனப் பொருளுரைத்துக் கொள்க. 'ஆய் இழை' என்பது 'ஆய் ஆன்மா' வுக்கு அடைமொழி.

நூல்களை ஆராயும் ஆன்மா என்றதனுல் வேருெரு கருத்தும் புலப்படுகிறது. நூல்களை ஆராயும் இயல்பில் ஆன்மாக்கள் இருப்பதனுல் உலகத்தில் ஆய்வுக்குரிய நூல்கள் தோன்றலாயின. அல்லாவிட்டால் தோன்றமாட்டா. முதலில் அடைமொழியாக வந்த கருத்து உயிர் போன்றது; அதைச் சொல்லும்போதே இரண்டாவது கருத்தும் அதன் உடம்பைப் போல் தானே தோன்றி வருகிறது. உயிர் உடம்போடுதான் வரும், போகும். அதனுல், புலப்படுகின்ற இந்த இரண்டாவது கருத்தை, உடம்பெனக் கொண்டு உடம்பொடு புணர்த்து, முதற்கருத்தை ஓதுதலாகக் கூறுவதுண்டு.

சத்தாகிய அருவையும் அசத்தாகிய உருவையும் ஆக இரண்டையும் அறிந்து நுகர்ந்து உய்யக் கூடியதாய் உயிர் இருக்கிறது; அதனுல், இந்த இரண்டும் அல்லாததாக உயிர் தனித்தறியப்படுவதோடு, இந்த இரண்டையும் அறிந்து நுகரக் கூடியதாகவும் இருக்கிறதென்பதையும் அறிகிருேம்.

ஆயினும், ஆன்மா மலரில் மணம்போல் இவ்விரண்டோடும் அடங்கி மறைந்திருக்கிறது. சத்தோடும் அசத்தோடும் விளக்கமாய் உடன் நில்லாமலும், அதற்காக விளங்காமலும் இல்லை. மலரில் மணம் அடங்கியிருக்கும்போது தெரிவதில்லை; வெளிப்படும்போது தெரியாமலும் இல்லை. இது, பின் அடிகளின் கருத்து. படிகம் போல எதைச் சார்கிறதோ அதன் வண்ணமாய் அழுந்துந் தன்மையுடன் உயிர் உள்ளது.

மூன்றும் பிரிவின் முதலில் பொழிப்புரை கூறிய ஆசிரியர்,

1. இரண்டனையும் அறிவதாய்,
2. உபதேசியாய் நின்ற அவ்வறிவு,
3. இரண்டன் பாலும் உளதாய்,

ஆன்மா இருக்கிறது என்று, மூன்று வகையாய் விளக்கினர். 'இரு திறன்' என்பதற்கு 'இரண்டனையும் அறிவதாய்' என்று உரைத்தார். 'அறிவு உளது' என்பதற்கு 'உபதேசியாய்' அறிவிக்க அறியும் அறிவு உள்ளது என்று மேற்கொண்டார். படிகம்போற் சார்ந்ததன் வண்ணமாய், முன்பு அசத்தின்பாலும் பின்பு சத்தின்பாலும் உயிர் இருத்தலின், 'இரண்டன்பாலும் உளதாய்' என்று தெளிவித்தார்.

இந்த மூன்று வகைக்கும் விளக்கங்கூறும் வகையில் மூன்று செய்யுட்கள் இப் பிரிவுக்கு உரியனவாய்க் கூறப்படுகின்றன. அதில் ஒன்றுதான், 'அருவுருவந் தான் அறிதல்' என்பது. இரண்டாவது செய்யுள்,

"மயக்கம துற்று மருந்தின் தெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய், பேசில்—அசத்துமலை,
நீ அறிந்து செய்வினைகள் நீ அன்றி வேறசத்தத்
தானறிந்த துய்யாமை தான்."

பொருள் :

மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும் - (அறிவை விளக்குதற்குக் காரணம் இல்லாதபோது எதனையும் இன்னதென்று அறியாமல்) மயக்கமடைந்தும், காரணம் உள்ளபோது மருந்தினால் அந்த மயக்கம் தெளிந்து அறிவு தோன்றி அறிந்தும்; பெயர்த்து உணர் நீ சத்து ஆகாய் - இங்ஙனம் மாறி உணர்கின்ற உயிராகிய நீ சத்துப் பொருளாகமாட்டாய்; பேசில்- சொல்லப்போனால்; அசத்தும் அலை - நீ அசத்துப் பொருளும் அல்லையாய் இருக்கின்றனை;

நீயறிந்து செய்வினைகள் - ஏனென்றால், பிறவிகளில் நீ அறிந்து செய்த முன் வினைகளை; நீயன்றி அசத்துத் தான் அறிந்து துய்யாமை தான் - நீ அறிந்து துய்க்கின்றாயேயன்றி அசத்துப் பொருள்களும் அறிந்து நுகர்வதில்லை யாதலாலே தான்; வேறு - சத்துக்கும் அசத்துக்கும் நீ வேறு பொருளே.

மயக்கமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. மருந்து என்றது இங்கே, பசிக்குத் தீர்வு தரும் 'உணவு' 'நீர்' என்னும் இருமருந்து. 'தான்' இரண்டினுள், சத்துத்தான் என்று முன்னையது சேர்ந்து 'சத்தும்' என்னும் பொருளில் வந்தது. கடைசியில் உள்ளது, வேறுதான் என்று சேர்ந்து வேறே என்னும் பொருளில் வந்தது. 'குறிப்பொடு கொள்ளும்' என்னுந் தொல்காப்பியத்தால் (இடை. 34) இவை போல்வன ஆசிரியர் கருத்துக்குரியன.

சத்துமல்லாமல் அசத்துமல்லாமல் இருக்கும் உயிரின் அறிவு, அறிவிக்க அறியும் இயல்புடையதாய் இருக்கிறது; சத்தின் அறிவு அனைத்தும் தானே ஒருங்கறிவதாய் இருக்கிறது. உயிரின் அறிவு, ஒன்றொன்றாய் மாறி மாறி அறியும். ஆதலால், 'பெயர்த்து உணர் நீ' என்றார். நீ செய்த வினைகளை நீயே அறிந்து துய்க்கவேண்டும்; அசத்துக்கு அவற்றை அறிந்து துய்க்கும் அறிவு இல்லை. நினக்கு அறிவு இருத்தலால் நீ 'அசத்தும் அல்லை' என்றார். பசி திரும்பத் திரும்ப எடுத்தலால், 'பெயர்த்து உணரும் ஆன்மாவுக்குப்', பசி தீர்வதற்குரிய மருந்து கூறப்பட்டது; வேறு நோய்கள் அப்படித் திரும்பத் திரும்ப அடிக்கடி வருவதில்லை.

இவ்வாறு காரணம் கூறியதனால், பொழிப்புரையில் 'உபதேசியாய்' என்று வந்தது. உயிரின் அறிவியல்பு, அப்படி உபதேசித்து அறிவிக்க அறியும் இயல்பாய் இருக்கிறது. உயிரின் அறிவு, தானே அறியும் ஆற்றல் இல்லாதது. ஆனால், அறிவித்தால் அறியாததும் அன்று, 'சித்து', 'அசித்து' - சித்தசித்து என்று அவ்வாற்றால் அது பெயர் பெற்றது; அதன் அறிவு அப்படி ஒரு தனித்த தன்மையுடையது.

மூன்றாவது செய்யுள் :

> "மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாதல்
> அஞ்ஞானம் உள்ளம் அணைதல்காண்—மெய்ஞ்ஞானம்
> தானே யுளவன்றே தண்கடல்நீர் உப்புப்போல்
> தான்ஏய் உளம் உளவாத் தான்."

பொருள் :

அஞ்ஞானம் அசத்து ஆதல் மெய்ஞ்ஞானந் தன்னில் விளையாது - அறியாமை என்பது அசத்தாதலால் மெய்ஞ்ஞான

சிவத்தின் எதிரில் தோன்றாது; உள்ளம் அணைதல் - ஆனால் அந்த அஞ்ஞானம் உயிரை மட்டும் அடைதல்; தண் கடல் நீர் உப்புப் போல் - குளிர்ந்த கடலில், கடலை அடையாமல் தொன்று தொட்டே நீரை மட்டும் உப்பு அடைவது போல; மெய்ஞ்ஞானம் தானே உள அன்றே - மெய்ஞ்ஞானத்தை உடைய சிவசத்துத் தான் உள்ள தொன்மைக் காலத்திலேயே; தான் ஏய் உளம் உளவாத்தான் - தான் பற்றுதற்குரிய உயிர்கள் உள்ளனவாத லின்; காண் - உயிர்களை மட்டும் பற்றின என்று அறிந்து கொள்க.

அசத்து அஞ்ஞானம் எனப்பட்டது. ஆதலால் மெய்ஞ் ஞானம் என்பது சத்தெனத் தெரிந்தது. தொன்மையே என் னும் பொருட்டு 'மெய்ஞ்ஞானம் உள அன்றே' என்றார். அன்றே உயிர்களும் உள்ளனவாக, உயிரை மட்டும் அஞ் ஞானம் அணைதல் உப்புப் போல் காண் எனப்பட்டது. 'தான் ஏய்' என்பதில், தான் எழுவாய்ப் பொருள்பட வந்தது. 'உள வாத்தான்' என்னுமிடத்தில் 'உளவாகவே' என்று பொருள் செய்து கொள்க.

கடல் என்றது நீர் தங்கும் இடம். உப்பு அந்த இடத்தைப் பற்றாமல் நீரை மட்டும் பற்றுவதுபோல மெய்ஞ்ஞானக் கடவுள் இருக்கும்போதே உயிரை மட்டும் அறியாமை பற்றியது என்று கொள்ளப்படும். காரணம், பேரறிவுப் பெருமானை மலம் பற்ற முடியவில்லை; சிற்றறிவு உயிர்களை எளிதிற் பற்ற முடிந்தது.

இயல்பாக அஞ்ஞானத்தில் தொடக்குள்ள உயிர், வளர்ச்சி யில், சத்தையும் அறியும் மெய்ஞ்ஞானங் கொள்வதால், அசத் தின்பாலும் சத்தின்பாலும் இயைபு உளதாதலை இச் செய்யுள் அறிவித்தது.

அறிவுப் பொருளாகிய சிவத்தையும், அறியாப் பொரு ளாகிய உலகத்தையும், அறிந்து நுகரும் உரிமை உடைய மூன்றாவது பொருளாக உயிர் இருக்கிறது என்று அறிந்து கொண்டோம். இனி இவற்றில் உயர்ந்த பொருளை அறிந்து திளைக்கும் வகையில் உயிர் பக்குவம் அடையவேண்டும்.

பிறப்பினால் அறியாக் கருவிகளின் வாயிலாக உலகப் பொருள்களை உயிர் அறிந்து வருகிறது. இது பாச ஞானமும் பசு ஞானமும் ஆகும். இனிச் சிறிது சிறிதாகப் பேரறிவுப் பெரும் பொருளாகிய சிவத்தை எய்தித் திளைக்கும் பதிஞானம் பக்குவத்தை உயிர் பெறவேண்டும்.

உயிர்கள் இயற்கையில் ஒரே இயல்பின அல்ல; ஒவ்வொன்றின் அறிவுநிலை ஒவ்வொரு வகையாய் இருக்கிறது. நூல்கள் அவற்றைத் தொகுத்து மூன்று வகையாக வகைப் படுத்தி விளக்குகின்றன. கருப்பூரம் போல் அறிவித்த உடனே அறிந்து கொள்கிறவர்களும், திரிகளின் தீயைப் போல ஒரு முறைக்கு இருமுறையாக அறிவித்தபின் அறிபவர்களும், விறகில் தீப் பற்றுவதுபோலப் பன்முறை அறிவித்து அறிபவர் களும் உண்டு. முறையே இவர்கள் 'அறிவு நிலையினர்' (விஞ் ஞாஞகலர்) 'ஊழி நிலையினர்' (பிரளயாகலர்), 'மல நிலையினர்' (சகலர்) எனப்படுவார்கள்.

எல்லாம் வல்ல இறைவன் இந்த மூன்று வகையாரின் நிலைமைக்கு ஏற்றபடி அறிவித்து உதவுகிருன். அவன் அறிவிப் பது ஒரே வகையாய் இருந்தாலும், உள்ளத்தளவாய்த் தெளிந்துகொள்ளும் முதல் வகையாரும், எதிரிலிருந்து தெரி விக்க உணர்ந்து சிறக்கும் இரண்டாம் வகையாரும், பின் னிருந்து இயக்கி அறிவிக்க அறிந்துவரும் மூன்ரும் வகையாரும் எனத் தெளிந்து உணர்ந்து அறிந்துகொள்ளும்படி நேர்கிறது.

உள்ளே மறைந்திருந்த இத்தனை காலம் பொதுவாய் அறிவித்து வந்த கடவுளே பின்பு இம் மூன்று வகையிலும் குரு வாய்த் தோன்றி அருள் செய்கின்ருர். அறிவிக்கும் முழுமுதற் கடவுள் வேறு இல்லாமையால் ஒருவரே மூன்று வகையாக உரு வெடுத்து வருகிருர் என்று அறிதல் வேண்டும். மூவகையா ரிடத்திலும் அவர் ஒத்த கருணையுடையவரே யாளுலும் உயிர் களின் வேறுபட்ட இயல்புகளால் அவர் அறிவிப்பும் வேறு பாடாய் இருக்கிறது. விளங்குதல் ஒன்று, விளங்கித் தோன்று தல் ஒன்று, விளங்கித் தோன்றி அறிவிப்பது ஒன்று.

உயிர்களின் வேறுபாட்டினைச் சிவஞான முனிவர்,

> ''உயிர்களெல்லாம் தமக்குரிய படிவழியில் வைத்து அறியும் இயல்பினவன்றி ஒன்றுபோல் அறிவிக்க அறியும் இயல்பின அல்ல''

என்று சிற்றுரையிலும்,

''அவ்வறிவுகள் விரியால் பல வேறுபாடுகள் உடையத் அவ்வாறு படிவழி முறைபோல விளங்குதலும் ஒரு தன்மை யான் அன்று'' என்று பேருரையிலும் கூறுவார்.

பிறவி நிலையில் இத்தகைய உயிர்கள் ஐந்து புலன்கள் முதலிய கருவிகளில் வளர்ந்துகொண்டு வருகின்றன. உள்ளே

மறைவாய் இருந்துகொண்டு இதுவரையில் அறிவித்து வந்த சிவம், தவத்தால் பக்குவமடைந்து இம் மூவகை உயிர்களாகச் சிறந்து வரும்போது குருவாய் வெளிப்பட்டுப் பதிஞானத்தால் உண்மை உணரலாம் என்று தெளிவித்து ஈர்க்க, உயிர் உடம் பின் பற்றுவிட்டுத், தெரிவிக்கும் குருவும் தானும் அயலாகாமை யால் அவன் திருவடியே பற்றிக்கொண்டு, அப் பதிஞானத்தின் வழியே செல்லும்.

எட்டாம் நூற்பா:

பதி ஞானம் என்னும் சிவஞானமே இங்கே அடைய வேண்டிய பயிற்சி! இந்த ஞானப் பயிற்சியை உணர்த்துவது சிவஞானபோதத்தின் எட்டாம் நூற்பா; இது, மலநிலை யினர்க்கு (சகலர்க்கு) உரியது.

> "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
> தம்முதல் குருவு மாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
> டன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே'.

இந்த நூற்பா ஞானம் உணரும் முறைமையை உணர்த்து கிறது. ஞானம் என்பது 'பதி ஞானம்'; சிவத்தைப் பற்றிய ஞானமாதலால் 'சிவஞானம்' என்றும் சொல்லுவதுண்டு. சிவத்தை அறிந்து நுகர்வதற்கு இந்தச் சிவஞானம் இன்றி யமையாதது.

ஞானமெல்லாம் உயிரினிடத்தில் உண்டாவதுதான். பாசத்துக்கு அறிவு கிடையாதாதலால் அதைப் பற்றிய ஞான மும் உயிரினிடத்திலேதான் உண்டாக வேண்டும்.

நூல் என்பதும் மறை என்பதும் அறியாமைப் பொருள்க ளாதலால் அவற்றின் கருத்துக்களை அறிந்துகொள்ளும் அறி வும் 'பாச ஞானம்' என்றே சொல்லப்படும். ஆகவே நூலா ராய்ச்சிகளெல்லாம் பாசஞானமேயாம். அஃதாவது அசத்தாகிய நூல்களைப் பற்றிய ஞானங்கள்; சிவத்தைப் பற்றியதானாலும் அதனை நூல்களால் அறியும் போது, அதுவும் பாசஞானமே யாகும்.

(தொடரும்)

# சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

[பி. எல். சாமி, ஐ ஏ எஸ்.]

(பரல் ௭ பக்கம், ௩௪௪இன் தொடர்ச்சி)

சில தனிப்பட்ட ஆடைகளைப்பற்றியும் இலக்கியத்தில் செய்திகள் வருகின்றன. கார்நாற்பதில் (22) 'ஈர்ஙகட்டு' என்ற ஆடை குளிரைத் தாங்கும் ஆடையாகக் கூறப்பட்டுள்ளது. ஈரத்தைக் கெடுப்பது என்ற பொருளில் குளிரைத் தாங்கும் ஆடையாகக் கருதப்பட்டதெனத் தோன்றுகிறது. பட்டினப் பாலையில் பட்டுடுத்தவற்றை நீக்கிப் புணர்ச்சிக்காலத்து நொய்ய வாகிய வெள்ளியவற்றை உடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது. ஆதலின் காலத்திற்கும் நேரத்திற்கும் தகுந்தாற்போல் ஆடைகளை மாற்றி உடுத்துவது பழந்தமிழர் வழககம் என்று தெரிகின்றது. 'நீவி' என்ற பெயர் கம்பராமாயணத்தில் தோலாடையைக் குறித்து வழங்கியுள்ளது. ஆயினும் இந்த வழக்கு வடமொழி நூல்களைப் பின்பற்றிக் கம்பர் கூறியது என்று தோன்றுகின்றது. நீவி என்ற சொல் இக்காலத்தில் வடநாட்டு மொழிகளில் பெண்களின் தோள்மேல் சென்று கீழே விழும் சேலையின் முனைப்பகுதியைக் குறிக்கின்றது. நீவி என்ற பெயர் தமிழ்ச் சொல் என்று சில வடநாட்டு அறிஞர்கள் உறுதியாகக் கூறுகின்றனர். நீவி என்ற சொல் சங்க நூல்களில் வினைச்சொல்லாகத் தாண்டிச்செல்வது என்ற பொருளைத் தருவதைக் காணலாம். ''அருங்கடி அன்ன காவல் நீவி'' (நற்றிணை 365) என்ற வரியில் தாயின் காவலை மீறி, தாண்டிச் செல்வது என்ற பொருளில் நீவி என்ற சொல் வழங்கியதைக் காணலாம். சேலையின் ஒரு பகுதி தோளைத் தாண்டிச் செல்வதால் நீவி என்றழைக்கப்பட்டுப் பின்னர்த் தோலாடைக்கு வடமொழியில் வழங்கினதாகத் தெரிகின்றது.

நீவி என்ற பெயர்க்கு வடமொழியில் வேர்ச்சொல் இல்லை என்று வடமொழி அறிஞர்களே கருதுகின்றனர். (The breadth wise border is the broader of the two and is designated as the 'Nīvi') அதுபோன்றே வேதத்தில் வரும் 'ஒடு' (otu) என்பது (woof, web) என்ற பொருளில் வழங்குகின்றது. இப் பெயர் தமிழ்ச்சொல் என்று கருதுகின்றனர். தாண்டு (Tāntu) என்ற வடமொழி வேதச்சொல் நெய்யும் நூலைக் (yarn, thread) குறிக்கின்றது. இப் பெயரும் தமிழ்ச்சொல் என்று கருதுவர்.

(Tantra warp or loom) என்ற வேதச்சொல்லும் திராவிடச் சொல் என்று கருதுவர். 'தூச' (Tusa) என்ற சொல்லும் (The plain edge of 'Vaza' was attached to 'Tusa' or shorter fringe) என்ற பெயரையும் தமிழ்ச்சொல் என்று கருதுவர். தமிழில் வரும் 'அருக்காணி' என்ற பெயரே வடமொழியில் 'Arokah' என்று மாறியதாகக் கூறுவர். துணியில் பூக்களும் உருக்களும் அமைக்கப்பட்ட (embroidered) ஆடையை 'Arokah' (brilliant) என்று பண்டை வடமொழி நூல் கூறியுள்ளது. பட்டு என்ற பெயரே தமிழ்ச்சொல் என்று கருதலால், அர்த்தசாத்திரத்தில் 'பட்ரோனு' (Patrona) என்றவகை பட்டு கூறப்பட்டுள்ளது. கோசிகப்பட்டு (Kousheya), சீனப்பட்டு (China patta) கூறப் பட்டுள்ளது. இவ்வாறு வேதகாலத்தில் வழங்கிய ஆடைகளின் பல பெயர்கள் திராவிட மொழிச் சொற்கள் என்று ஆடை அணிகலன்களைப் பற்றி விரிவாக ஆராய்ந்த Jamila Brij Bhusham என்ற அறிஞர் ஒரு நூலில் (The Costumes and textiles of India) விளக்கியுள்ளார். அமரசிம்மம் என்ற வடமொழி நிகண்டில் ஊசியைக்கொண்டு ஆடையைத் தைக்கும் தொழி லாளரை 'Tunnavaya' என்று அழைத்துள்ளதைக் கவனிக்க வேண்டும்.

இந்தப் பெயர் 'Tantuvaya' (weaver) என்ற பெயருடன் ஒப்புமை உடையதை இந்த அறிஞர் கவனத்துடன் குறிப்பிட் டுள்ளார். துன்னுதல் என்பது தூய தமிழ்ச்சொல்லாகும். ஆதலின் இந்தத் 'துன்னவயா' என்ற வடமொழிப் பெயர் தமிழும் வடமொழியும் கலந்த பெயராகத் தெரிகின்றது. இது போன்றதே நெய்வோரைக் குறித்த 'தாண்டுவயா' என்ற வட மொழிப் பெயரும் கலப்புப் பெயராகத் தெரிகின்றது. ஆதலின் ஆரியர் இந்தியாவில் நுழையும்போது சிறந்த நாகரிகம் அடைந்தவர் இல்லை என்பதை வரலாறு கூறுகின்றது. குளிர் மிக்க நாடுகளில் இருந்துவந்த ஆரியர் பருத்தி ஆடையைத் தெரியாது இருந்தனர். பிற்காலத்தில் வரலாற்றுக் காலத்துக் கிரேக்கர்கூட, பருத்தி இழையைத் தரும் ஆடைகள் மரத்தில் விளைவதாக எழுதினர்.

ஆரியர் இந்தியாவுக்கு வருவதற்கு முன்னர் அறிந்த ஆடைகள் பெரும்பாலும் தோல் ஆடைகளும் கம்பளி ஆடை களுமாகும். கம்பளி என்ற பெயர்கூட இன்று முண்டா மொழி யைச் சேர்ந்தது என்று மொழிநூலறிஞர்கள் காட்டியுள்ளனர். ஆதலின் வேதகாலத்து ஆரியர் பருத்தி ஆடைகளை இந்தியா விற்கு வந்தபோது அறிந்ததால் திராவிடர்களின் பெயர்களை

எடுத்துப் பயன்படுத்தியது இயற்கையே. இதை வடநூல் அறிஞர் சிலர் ஒப்புக்கொண்டுள்ளனர். இக்கருத்தை மோட்டிச்சந்திரா போன்ற ஒருசில வடநாட்டு அறிஞர்கள் மறுப்பது இயற்கையான வரலாற்று நிகழ்ச்சிக்கும் பகுத்தறிவுக்கும் ஒவ்வாத கருத்தாகும். இக் காலத்தில் 'சோமன்' என்ற பெயர் தென்னார்க்காடு முதலிய மாவட்டங்களில் ஆடவரின் ஆடைக்கும் பாமர மக்களிடம் வழங்குகின்றது. ஆயினும் இப் பெயர் வடமொழிச் சொல் என்பதில் ஐயமில்லை. இயூன்-சாங் (Hieun-Tsiang) என்ற சீனத்துறவி இந்தியாவிற்கு வந்தபோது சோமன் (T'soma, Kshouma) என்ற ஆடையையும் கம்பளத்தையும் (Kilun-polo) குறிப்பிட்டுள்ளார். சோமன் என்ற ஆடை ஒருவகைச் சணல் நாரினல் நெய்யப்பட்டதென்றும் கம்பளம் ஆட்டு மயிரால் நெய்யப்பட்டதென்றும் கூறியுள்ளான். பட்டாடையைக் கோசிகம் என்ற பெயரில் (Kieu-she-ye) கூறியுள்ளான். சோமன் என்ற பெயர் கி. பி. ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளில் சணல்நார் ஆடைகளைக்குறித்து வழங்கியிருப்பினும் இன்று தமிழ்நாட்டின் வடபகுதியில் ஆடவர் அணியும் பருத்தி ஆடையைக் குறிப்பிடுவது கவனிக்கத் தக்கதாகும். ஆதலின் ஒரு மொழியில் ஒரு குறிப்பிட்ட பொருளில் வழங்கும் பெயர் பிறமொழிக்குப் புகும்போது வேறு பொருளில் வழங்குவது இயற்கையான நிகழ்ச்சியேயாகும். இன்று வழங்கும் சேலை என்ற பெயர் தமிழ்ச்சொல் அன்று என்று சிலர் கூறுவர்.

சங்க காலத்தில் இப் பெயர் வழங்கவில்லை என்பது உண்மைதான். ஆயினும் திருமுருகாற்றுப்படையில் 'சீரை' என்று அழைக்கட்டுள்ளது. சீரை என்ற பெயர் சங்க காலத்திலேயே ஆடவர் பெண்டிர் அணியும் முழு ஆடைக்கு வழங்கப்பட்டு, பின்னர்ப் பெண்டிர் ஆடைக்கு மட்டும் வழங்கியது. புடைவை என்றபெயரின் வரலாற்றைப்பார்த்தால் இடைக்காலம் வரையில் ஆடவர் பெண்டிர் ஆடைக்குப் பொதுப்பெயராக வழங்கி வந்தது கவனிக்கத்தக்கதாகும். சீரை என்ற பெயரே வடநாட்டு மொழிகளில் (Saree) என்று மாற்றப்பட்டது. வடமொழியில் இப் பெயர்க்கு வேர்ச்சொல் இல்லையென்பது கருதத்தக்கது. திருமுருகாற்றுப்படையில் 'சீரை தைஇய உடுக்கையர்' (126) என்று கூறப்பட்டுள்ளது. மரவுரியை உடையாகச் செய்த ஆடையினையுடையவர் என்றும் காவிக்கல்லை நீரில் கரைத்துத் தோய்த்துச் சாயமேற்றிய ஆடையை அறிந்தவர் என்றும் இருவகை உரைகள் கூறப்பட்டுள்ளன. ஆயினும் சீரை என்ற பண்டைத் தமிழ்ப்பெயர் சேலை என்ற தற்காலத் தமிழ்ப் பெயரைவிடத் தற்கால வடமொழிப் பெயரான 'சாரி'

என்ற பெயருடன் ஒத்துள்ளது கவனிக்கத் தக்கதாகும். சேலம் என்ற தற்கால நகரத்தின் பெயரால் சேலை என்ற பெயர் வந்தது என்று தமிழறிஞர் சிலர் கூறுவது பொருத்தமற்றது. திருமுருகாற்றுப்படை என்ற நூல் பாடப்பட்ட காலத்தில் 'சீரை' என்ற பெயர் மரவுரியைக் குறித்திருக்கலாம். மரவுரி என்பது சிலைகை மரத்தின் (Antiaris Toscicoria) தோலை உரித்து அணிந்த காடுவாழ்நரின் பண்டைக்கால ஆடையாக இருந்திருக்கலாம். முருகன் குறிஞ்சிநிலக் கடவுளாதலால் திருமுருகாற்றுப்படை பாடப்பட்ட காலத்தில் முருகனைக் காடுவாழ் முடிகளும் அந்தணரும் தொழுததால் இந்த மரவுரி ஆடை காடுவாழ்நரின் பூசாரி அணிந்த ஆடையாக இருந்திருக்கலாம் என்று கருதுகின்றேன். இந்த ஆடையைப் பின்பற்றியே காவிக்கல்லைக் கரைத்துத் தோய்த்த காவி ஆடை தோன்றியதாகத் தெரிகின்றது. இந்தக் காவி ஆடை இன்று வேத மத வழிபாட்டிற்குத் தொடர்பில்லாத ஆடையாகும். இதைச் சிறு தெய்வ வழிபாட்டிற்கும் வைதீக தெய்வ வழிபாட்டிற்குப் புறம்பான தெய்வ வழிபாட்டிற்கும் பயன்படுத்துவது கவனிக்கத் தக்கது. கத்தோலிக்க மதத்தில் வழிபடும் தாய்த் தெய்வமான வேளாங்கண்ணிக்குச் செல்வோர்கூடக் காவி ஆடை அணிவதைக் காணலாம்.

சீரை என்ற சிர்பெற்ற பெயர் பிற்காலத்தில் இந்தியா முழுவதும் பெண்டிர் அணியும் தனித்த உடையாகவும் சிறந்த ஆடையாகவும் வழங்கப்பட்டதைக் கவனிக்க வேண்டும். திருமுருகாற்றுப்படையில் 'உடுக்கை' என்றே வழங்கப்பட்ட ஆடை இன்று உடுப்பு என்று வழங்குதையும் கவனிக்கவேண்டும். பெண்டிரின் ஒரே ஒரு சிறப்பான ஆடையான சேலையைக் கண்டுபிடித்தவனே பண்டைத் தமிழன் என்பதை உணர வேண்டும். மோட்டிச்சந்திரா என்ற அறிஞரின் கருத்துப்படி பண்டைக்காலத்து இந்தியர் மனிதன் உடலைப் பிரித்துப் பகுத்துக் காட்டும் ஆடைகளை அணியும் கொள்கையுடையவரல்லர் என்று கூறினர். இந்தக் கொள்கை பண்டைத் திராவிடருடைய, தமிழருடைய கொள்கையாகும் என்பதை இதே அறிஞர் புரிந்துகொள்ளவில்லை. முக்கியமாகப் பெண்டிரின் உடை உடலைப் பாதி பாதியாகப் பிரித்துக்காட்டக்கூடாது என்ற கொள்கையால்தான் சேலை இன்றும் சிறப்புற்றுள்ளது.

அதே கொள்கையால் வேட்டியும் ஆடவரிடையே அதிலும் தனிப்பட்ட வகையில் தென்னிந்தியரிடையே வழங்குகின்றது. ஆயினும் மொகலாயர் தொடர்பால் வடநாட்டில் பண்டை

இந்தியப் பண்பாடு வலுவிழந்த தன்மையால் பெண்டிரும் ஆடவரும் மங்கோலியர் அணிந்த உடலைப் பிரித்துக்காட்டும் ஆடைகளை (Salwar-Kamizh-Kurta) உடுத்தினர். இன்றும் அணிகின்றனர். ஆயினும் மேல் நாட்டாரும் பெண்டிரின் ஆடைகளில் உலகிலேயே சேலைக்கு நிகரிலை என்று புகழ்ந்து கூறுகின்றனர். தென்னிந்தியப் பெண்கள் பெரும்பாலும் சேலையைத் தவிரப் பிற ஆடைகளை அணிவதில்லை என்பதும் கவனிக்கத் தக்கது. ஆடவரின் ஆடையைக்கூட "உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்" என்ற முதுமொழியில் தெளிவாகக் காணலாம். ஆடவர்கள்கூடக் கால்களையோ, கைகளையோ பிரித்துக்காட்டும ஆடைகளை அணியும் பண்பாடு அக் காலத்தில் இல்லை. இது மிகப் பிற்காலத்துப் பண்பாடாகும். வெளிநாடடார் கொண்டுவந்த பண்பாடாகும். ஆதலின் இக காலத்திய சேலை ஆரியர் கண்ட உடையன்று என்பதைக் கண்டுகொள்ள வேண்டும். வடநாட்டுப் பெண்டிர் இக் காலத்தில் சேலையை விட்டுவிட்டு வேறு நாட்டு ஆடைகளை அணிந்தாலும் தமிழ்ப் பெண்டிர் இன்றும் சேலையைத் தவிர வேறு ஆடைகளை அணிவதில்லை என்பதை மிகவும் கவனிக்க வேண்டும.

திருமுருகாற்றுப்படையில்,

"மானின்
உரிவை தைஇய ஊன்கெடுமார்பின்
என்புஎழுந்து இயங்கும் யாக்கையர்"

என்று கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். ஆதலின் இந்த நூல் இயற்றப்பட்ட காலத்திலேயே வேத வழக்கைப் பின் பற்றிப் பார்ப்பவர்கள் கிருட்டிணசினம் என்ற கருமான் (இரலை) தோலைப் போர்த்து விரதமிருந்து பட்டினிகிடந்தனர் என்பது தெரிகின்றது. தமிழர் தெய்வமான முருகனை ஆரிய வழிபாட்டு முறையில் போற்றி வணங்கினர் என்பதையே இச் செய்தி காட்டுகின்றது.

திருமுருகாற்றுப்படையில் எப்படிப் பழங்குடி மக்களும், தமிழரும், ஆரியரும் முருகனைப் பெருங்கடவுளாகத் தொழுத வரலாறு கூறப்பட்டுள்ளது என்பதை அறிஞர்கள் உணர வில்லை. பண்டைய பழங்குடிகளுடைய, தமிழருடைய தனித் தெய்வங்கள் பேரும் சிறப்பும் பெற்ற பின்பு எப்படி ஆரியர் இத் தெய்வங்களையெல்லாம் வேத மதத்தில் சேர்த்துச் செரித் துக்கொண்டனர் என்பதை ஆராயும்போது உண்மை புலப்படு

கின்றது. ரிக்வேதம் எழுதப்பட்டது 1200 (B. C.) என்று கூறுவர். இந்த ரிக் வேதத்திலும் சேலையின் ஓரப்பகுதி குறிப்பிடப்பட்டுள்ளது. மகாபாரதத்தில் 'மணிச்சீரை' என்ற ஆடை கூறப்பட்டுள்ளது. இது மணிகளைச் சேலைத் தலைப்பின் ஓரத்திலோ நடுவிலோ தைத்த ஆடையாகலாம்.

மணி என்ற பெயர் தமிழ்ச்சொல் என்று டாக்டர் எமனோ அவர்கள் சுட்டிக்காட்டியுள்ளார். ஆதலின் 'மணிச்சீரை' என்ற ஆடைப் பெயர் தமிழ்ச்சொல்லேயாகும். இக் காலத்தில் வடநாட்டில் சேலையின் ஒரு பகுதிக்குப் பயன்படுத்தும் 'பல்லவ்' (Pallav) என்ற பெயரும் 'சோளி' என்ற உடையும் பல்லவர், சோழர் நாட்டைக் குறித்துவந்த ஆடைப் பெயராகும் என்று (Times of India-Annual 1959) வடநாட்டு அறிஞர் ஒருவர் எழுதியுள்ளார். இராஜதரங்கினி என்ற வடமொழி நூல் 'சோளி' என்ற பெண்டிர் உடை தெக்காணத்தில் இருந்து வந்ததாகக் கூறியுள்ளது.

'கஞ்சோலிகா' என்ற ஆடை படைவீரர் அணிந்த ஆடையாகக் கூறப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் கஞ்சுகம் என்ற ஆடை அரசுத்தூதுவர் அணிந்ததாகக் கூறியுள்ளதையும் கவனிக்க வேண்டும். கஞ்சுக முதல்வர் என்பதற்குச் 'சட்டையிட்ட பிரதானர்' என்று பொருள் கூறப்பட்டுள்ளதையும் காணலாம் ஆதலின் கஞ்சோலிகா என்ற பெயர் ஆடவர் அணிந்த சட்டை என்பது தெரிகின்றது. சங்க நூல்களில் ஆடைகளை உவமைப் படுத்திக் கூறியதுபோலவே 'Abravan' (Running water) 'Baft Hawa' (Woven air) 'Thabnam' (evening dew) என்றெல்லாம் மொகலாயர் சிறப்புற ஆண்ட காலத்தில் தாங்கள் அணிந்த ஆடைகளை அழைத்தனர். ஆனால் ஓடும் நீர், நெய்த ஆவி, மாலைப் பனி என்ற உவமைகளைவிட மிகச் சிறந்த உவமைகளை ஆடைகளுக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தமிழ்ப் புலவன் பயன்படுத்தியிருக்கின்றான். அத்தகைய சிறந்த நயமான ஆடைகள் சங்க காலத்திலேயே இருந்தன.

தமிழிலக்கியத்தில் வேறு சிலவகை ஆடைகளும் கூறப்பட்டுள்ளன. எழுத்தாடை, எழுத்து, என்ற ஆடைப் பெயர்கள் பிற்கால இலக்கியத்தில் வருகின்றன. இந்த ஆடைகள் ஓவியம் வரையப்பட்ட ஆடைகள் என்று தெரிகின்றன. எழுதி என்ற சொல்லே ஓவியத்தைக் குறித்துச் சங்க நூலில் (அகம்) வழங்கியது. செய்தது செய்தி எனப்பட்டதுபோல எழுதப் பட்டது எழுதி என்று அழைக்கப்பட்டது. சங்க காலத்திலேயே

எழுதி என்ற ஓவியம் வரைந்த ஆடை இருந்தது என்பது தெரிகின்றது. இதையே பிற்காலத்தில் எழுத்தாடை என்று கூறினர். எழுத்து என்பது ஓவியத்தைக் குறித்தது. ஏனெனில் தமிழரின் மிகமிகப் பண்டைக் காலத்து எழுத்து அரப்பா, மொகஞ்சதாரோ போன்ற நாகரிகத்தில் உருவெழுத்தாகவே இருந்திருக்க வேண்டும். ஓவியம் என்ற சங்கப் பெயர் பிற்காலத்தில் பெரும்பாலும் வழக்கற்றுப்போனாலும், சித்திரம் என்ற பெயரே வழக்கில் பயின்றாலும் இன்றும் தமிழ்நாட்டில் கொங்கு நாட்டுப்பகுதியில் 'ஓவியப்பிள்ளையோ' என்று கூறி அதிசயப் பிள்ளையோ என்ற பொருளில் தூயதமிழில் கேட்கும் வழக்கு உள்ளது.

இந்த எழுதி, எழுத்தாடை என்பவை Printed fabrics என்று இக்காலத்தில் வழங்கும் ஆடைகளாகும். இந்த ஆடையை வடமொழியில் 'Chitranta' என்றும் வடமொழி நூலான ஆபஸ்தம்ப சூத்திரத்தில் (Chitra vastra) சித்திர வஸ்திரா (Chitra vastra) என்றும் அழைக்கப்பட்டிருப்பதையும் காணலாம். சிலப்பதிகாரத்தில் 'சித்திரப்படாம்' (7 : 1) என்ற ஆடைப் பெயர்க்கு அடியார்க்கு நல்லார் பூத்தொழிலையுடைய துகில் என்று கூறியிருப்பதையும் காணலாம். சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள 'அம்பரம்' எனப்படும் ஆடைகள் வடமொழி நூல்களிலும் சொல்லப்பட்டுள்ளன. பலராமன் நீலாம்பரத்தை அணிந்ததாகவும் கண்ணன் பீதாம்பரத்தை அணிந்ததாகவும் மகாபாரதம் கூறியுள்ளது.

தமிழிலக்கியத்தில் படாம் என்ற ஆடைப்பெயரும் படம் என்ற ஆடைப்பெயரும் வழங்குவதைக் காணலாம். படாம் என்பதும் படம் என்பதும் ஒரே ஆடைப்பெயராகத் தோன்றினும் இந்த இரு ஆடைகளை வேற்றுமைப்படுத்தியும் கூறியுள்ளனர். பெரும்பாணாற்றுப்படையில் 'படம்புகு மிலேச்சர்' என்று கூறப்பட்ட இடத்தில் சட்டையிடும் மிலேச்சர் என்று உரை கூறப்பட்டுள்ளது. இது யவனர் போன்ற வெளிநாட்டார் அணிந்த சட்டையாகும். இன்றும் மேல்நாட்டுக்காரருக்கு இந்தியப் பெண்கள் பெற்றுத்தந்த கால்வழியே வந்த குலத்தினரைச் சட்டைக்காரர் என்று கூறுவது அவர்கள் சட்டையிடும் பழக்கமுடையவராயிருந்ததால் என்பது தெரிந்ததாகும். சட்டையிடுவது பொதுவாகப் பண்டைத் தமிழர் வழக்கமன்று. சிலப்பதிகாரத்தில் 'மெய்ப்பை புக்கு' (கொலைக்களக்காதை 107) என்று கூறப்பட்டுள்ளது. படம் இரண்டு ஓரங்களையும் சேர்த்துத் தைத்த ஆடை என்பது தெரிகின்றது. தைத்த ஆடையைப் பண்டைக் காலத்தில் 'பை' என்று அழைத்தனர்.

சங்க காலத்துப் புலவர் பெயராக 'பக்குடுக்கை நன்கணியனார்' என்ற பெயர் வந்துள்ளது. இவர் பை போன்ற தைத்த ஆடையை அணிந்ததால் இந்தப் பெயர் பெற்றார் என்று தெரிகின்றது. பக்கு என்பது ஒருவகை ஆடையாகும். பக்கு என்பதற்கு, பை என்ற பொருள் கலித்தொகையில் கூறப்பட்டுள்ளது. இந்த இடத்தில் தற்காலப்பொருளில் வழங்கியிருப்பதைக் காணலாம். பக்கு என்ற உடுக்கை சங்க காலத்திலேயே வழங்கியது. பக்கு என்பது தற்காலத்துப் பையையும் குறித்தது.

"பொல்லம் பொத்துதல்" என்ற சங்க நூல் வழக்கு தைக்கும் தொழிலைக் குறித்து வழங்கியது.

"பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை"

என்று பொருநராற்றுப்படை (8) கூறியுள்ளது. யாழின் பத்தரை மூடிய தோலாடை தைக்கப்பட்டிருந்ததை மலைபடுகடாம் கூறியுள்ளது. இந்தத் தையல் மகளிர் மார்பிடத்தேயிருந்து கீழிறங்கிய மெல்லிய மயிர் ஒழுங்கு இருந்ததாகக் கூறப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கதாகும். இஃது ஒருவகைத் தனிப்பட்ட தையல் வகை (Cross-stiching) என்று கருத வேண்டியுள்ளது. ஆதலின், தைத்த ஆடை, சட்டைபோன்ற ஆடை பண்டைக் காலத்தில் தென்னிந்தியரிடையே பயின்றதில்லை என்று அறுதியாக மோட்டிச்சந்திரா என்ற வடநாட்டு அறிஞர் கூறியுள்ளது அவருக்குச் சங்க நூலறிவு இல்லாததினால் என்பது தெரிகின்றது.

பைநாகம் என்ற வழக்கு திருவாசகம் போன்ற தமிழ் நூல்களில் வழங்கியுள்ளது. நல்ல பாம்பு படமெடுத்து ஆடும் போது அதன் தலை தைத்த ஒரு சிறு பை போல இருந்ததால் 'பைநாகம்' என்றும் 'பைந்தலைய நாகம்' என்றும் கூறினர். நல்லபாம்பின் தலையைச் சங்க காலத்தில் பை என்றும் பிற்காலத்தில் படம் என்றும் அழைத்தனர். பையை விரித்து ஆடியது போல் இருந்ததால் 'பை' என்று அழைத்தனர். பிற்காலத்தில் படம் என்ற சொல் பையைக் குறித்து வழங்கினதாலும் நாகப்பாம்பின் தலையில் படம் வரைந்தாற்போலக் குறி இருந்ததாலும் நல்லபாம்பு படமெடுத்து ஆடுவதாகக் கூறும் வழக்கு வந்தது.

'பையரா உரியினன் கடைப் படாம்'   (147)

என்று திருவிளையாடற்புராணம் கூறுவதையும் கவனிக்க வேண்டும். நல்லபாம்பு படமெடுக்கும்போது தலைப்பையை ஊதிப் பயமுறுத்துகின்றது என்று கருதினர்.

படம் என்ற சொல் சித்திரம் என்ற பொருளிலும் வழங்கியுள்ளது. படகாரன் என்ற சொல் வழங்கிற்கு யாழ்ப்பாண அகராதி நெய்வோர்களில் ஒருவகை ஓவியன் என்று பொருள் கூறியுள்ளது. படம் என்ற பெயர் ஓவிய ஆடை என்ற பொருளில் சங்க நூலிலேயே வழங்கியுள்ளது.

"புதுவ தியன்ற மெழுகுசெய் படமிசைத்
திண்ணிலை மருப்பி னாடுதலை யாக
விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலன் மண்டிலத்து
முரண்மிகு சிறப்பிற் செல்வனொடு நிலைஇய
உரோகிணி நினைவன ணோக்கி நெடிதுயிரா"

—நெடுநல்வாடை. 159-163

பாண்டியனின் பட்டத்தரசி படுத்திருந்த கட்டிலின்மேல் மேற்கட்டியாக (விதானம்) இருந்த "மெழுகு செய் படத்தில்" இராசி வட்டம் வரையப்பெற்று இருந்ததாகக் கூறியுள்ளதைக் கவனிக்கவேண்டும். மெழுகுசெய் படம் எதுவென்று தெளிவாக உரை கூறப்படவில்லை. இன்றும் மெழுகை வழித்து ஓவியம் வரையப்படும் ஆடைகள் புகழ்பெற்றுள்ளன. இத்தகைய ஓவியம் வரைந்த ஆடைகளை 'Batik' என்று சொல்வார்கள். இஃது ஒருவகை அச்சுத் தொழிலாகும். இந்த ஓவியத் தொழில் ஜாவாவிலிருந்து இந்திய நாட்டிற்கு முற்காலத்திலேயே பரவியதாக அறிஞர்கள் கூறுவர். சங்க காலத்திலேயே Batik என்ற நெய்தற்கலை தமிழ்நாட்டில் பரவியிருக்கவேண்டும். அரசர்கள் அரண்மனையில் இந்த ஓவிய ஆடைகள் போற்றப்பெற்றன. பிற்காலத்தில் படம் என்ற சொல்லிற்குப் பல பொருள்கள் கூறப்பட்டுள்ளன. சீலை, சித்திரச்சீலை, திரைச்சீலை, பெருங்கொடி, விருதுக்கொடி என்ற பொருள்களைப் பிங்கலந்தை நிகண்டு கூறியுள்ளது. யானைமுக படாத்தைக்குறித்தும் மாந்தர் மேலே அணியும் போர்வையைக் குறித்தும் படம் என்ற சொல் நூல்களில் வழங்கியுள்ளது. (தொடரும்)

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்ணென்று உணரப் படும். —குறள் 575

# "குற்றம் குற்றமே"

[இரா. இளங்குமரன்]

"பாவின் சுவைக் கடல் உண்டு எழுந்தவர்"

கம்பர்! அவர், 'கல்வியில் பெரியவர் கம்பர்' என எடுத்துக் காட்டானவர். 'கவிக்குலக் கோமான்' என்னும் புகழ் வாய்ந்தவர். அவர் பாட்டு ஒன்று காளமேகத்தைக் கிளறியது; கிண்டியது; "இப்படியே போனால் இந்த மொழி என்ன ஆவது?" என்னும் உணர்வைத் தூண்டியது. அத் தூண்டுதல் "மூச்சு விடுமுன்னே மூந்நூறும் நானூறும் ஆச் சென்றால் ஆயிரம்பாட்டாகாதோ" என்றும் காளமேகத்தினிடமிருந்து ஒரு பாட்டாக வெளிப்பட்டது.

கம்பர் என்ன தவறு செய்தார்? ஒரு நெடிலைக் குறிலாக மாற்றினார்; அதற்குக் 'குறுக்கல் விகாரம்' என்பது பெயர். 'குறுகும் வழி குறுக்கல்' என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். பின்வந்தோர் குறுகும் வழியைப் பற்றி அக்கறைப்படாமல் வேண்டுமாறெல்லாம் குறுக்கிக் கொண்டனர். "சொல் கிடையாமல் திண்டாடும் போலிப் புலவன் என்றால் போகிறான் எனப் பொறுத்துக்கொள்ளலாம். கவிக்குலக் கோமான் இந்த வேலையைச் செய்யலாமா?" என்பதே காளமேகத்திற்குத் தோன்றிய குற்றச்சாட்டு! 'நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே' என்பது தமிழ் வழக்கன்றோ!

'நாராயணன்' என்னும் சொல்லைக் கம்பர் 'நராயணன்' ஆக்கி விட்டார். பெயரை இப்படியாக்க வேண்டுமா? பெயர்களையெல்லாம் இவ்வாறு மனம்போலக் குறைத்தும், கூட்டியும், திரித்தும், பிரித்தும் வைத்துக் கொண்டேபோனால் வரலாற்றில் எத்துணைக் கேடுகள் உண்டாம் என்னும் காலக்கண்ணோட்டம் காளமேகத்தை உந்தித் தள்ளியது. அது பாட்டுருக்கொண்டு வெளிப்பட்டது.

"ஆதியரி யோநம நராயணர் திருக்கதை" எனத் தொடங்கும் சிறப்புப் பாயிரப் பாடலிலே 'நராயணர்' வருகின்றார். 'சந்தம்' கருதி இந்த விகாரத்தைக் கொண்டார் கம்பர். காளமேகர், கம்பரை எள்ளி இந்த விகாரத்தை ஒன்றுக்கு நாலாக்கி நகைக்கிறார்:

நாரா யணனை நராயணனென் றேகம்பன்
ஓராமல் சொன்ன உறுதியால்—நேராக
'வார்'என்றால் வர்'என்பேன் 'வாள்'என்றால் 'வள்' என்பேன்
'நார்'என்றால் 'நர்'என்பேன் 'நன்'

வல்லான் வகுக்கும் வழக்கே வழக்கு; அவ் வல்லான் வகுக்கும் வழக்கே, இழுக்குக்குத் தள்ளக்கூடாதன்றோ! ஆதலால், கம்பரை ஓராமல் (ஆராயாமல்) சொன்ன கம்பராகக்

கூறினர் கவி காளமேகர். தாம், இனி எவ்வாறு சொல்லப் போகிருராம்! 'வார்' என்பதை 'வர்' என்பாராம். 'வாள்' என்பதை 'வள்' என்பாராம்; 'நார்' என்பதை 'நர்' என்பாராம்; சொற்களில் விகாரத்தைப் புகுத்திஞல் போதுமா? 'நான்' என்பதும் 'நன்' ஆகி நகையிட நாட்டுகிருர் பாட்டை! சொல் விகாரம் எப்படி வரலாம்? பொருள் விகாரம் உண்டாகாத வகையில் சொல் விகாரம் வரலாம். பொருளைக் கெடுக்க ஒரு விகாரம் வேண்டுமா? மொழிநலம் நாடுவோர் எண்ணிப்பார்க்க வேண்டிய செய்தி இது!

காளமேகப் புலவர் போலவே பாடல்திறம் வாய்ந்தவர் வேம்பத்தூர் பிச்சுவையர். அவரிடம் ஒரு புலவர் வந்தார். பிச்சுவையர் புலமைத் திறத்தை ஆராய முற்பட்டார். பிச்சுவையர் பெயரே அவருக்குப் பளிச்சிட்டது. 'ச்' என்று பாடல் தொடங்கவேண்டும். 'சு' என்று பாடல் முடியவேண்டும்'' என்று கூறினர். பிச்சுவையர், 'சொற்களைப் பிச்சுப்பிச்சு வைப்பார்' என்று பெயர்ப் பொருத்தம் காட்டினர் ஒரு புலவர். இப் புலவரோ 'பிச்சு' என்பதையே 'பிய்த்து' வைத்துப் பாடக் கூறினர்.

பிச்சுவையர், விஞவியவர் உள்ளக் குறிப்பை உணர்ந்தார்; 'மொழிமுதல் எழுத்துக்கள் இவை' என்பதையும் அறியாத மடமையை எண்ணி உள்ளே நகைத்தார். ஒரு பாடல் பாடினர்.

> 'இச்சன்ஞ' என்ருய்; எழுத்தறியா மூடாகேள்;
> 'இச்சன்ஞ' முன்மொழிச்சீர்க் கெப்படியாம்—சிச்சீயே
> நாரணனுக் குச்சரிதா ஞல்சரிதான் நீசொன்ன
> ஒரவஞ்ச மானபேச் சு''

என்பது அது.

நாரணன் (நாராயணன்) என்பவர் இப் பேச்சின்போது உடனிருந்த ஓர் அன்பர். ''நீ சொன்ன ஓரவஞ்சமான பேச்சு நாரணனுக்குச் சரியாஞல் எனக்கும் சரிதான்'' என்று அவரை முற்படுத்திக் கூறினர் பிச்சுவையர். 'ச்' என்பது மெய். அஃது இயங்குதற்கு உயிர் இன்றியமையாதது ஒன்று, உயிர் ஒலி முன்னே நிற்கவேண்டும்; இல்லையாஞல் பின்னே நிற்க வேண்டும். இது தமிழ் மரபு. இம் மரபு போற்ருமல், 'ச்' என்று மொழி முதலில் வைத்துப் பாடச் சொல்வது அறிவுடையர் செயலாகுமா? என்பது பிச்சுவையர் இடிப்புரை!

இதழ் எழுத்தாளர்க்குக் காளமேகர் கருத்துரையும் பிச்சுவையர் இடிப்புரையும் ஏறுமா? தமிழறிஞருலகம் ஏற்றுக் கொடி பிடித்துச் செல்லுமா?

———

# பழந்தமிழில் மக்கட்பெயர்

[பன்மொழிப் புலவர், இரா. மதிவாணன்]

(சிலம்பு ௰௨, பரல் ௧, ௪௰௧ஆம் பக்கத் தொடர்ச்சி)

இதன்படி, அம்மூவன் என்னுஞ்சொல், விரும்புதிறவன்; விரும்பத்தக்கவன் எனப் பொருள்படுகிறது. விரும்பத்தக்கவன் என்னும் பொருள்படப் பழந்தமிழர் தம் குழந்தைகளுக்கு அம்மூவன் எனப் பெயரிட்டிருக்கலாம். உலோச்சனர் கீழைக் கடற்கரையூர்களைப் பாடியதுபோல் இவர் மேலைக் கடற்கரையூர்களைப் பாடியிருப்பதால் சேரநாட்டவர் எனக் கருத இடமிருப்பதாலும், இன்றும் மலையாளத்தார் தம் குழந்தைகளுக்கு அம்மு திம்மு திப்பு எனப் பெயரிடுவதாலும் இவரது இயற்பெயர் அம்மு என்னும் வினையடியாகத் தோன்றியது என்பதில் ஐயமில்லை. அம்மூவனர் என்பது அம்மூவனாராகத் திரிந்திருக்கும் என்று கூறுவது ஏற்புடைத்தன்று.

21. அம்மெய்யன் நாகனர்:

இவர் நற்றிணையில் 245 ஆம் பாடலைப் பாடியவர். நாகன் என்பது இவருடைய இயற்பெயர். புலவரிற் பெரும்பாலர் தந்தையின் பெயரையும் தம் பெயரோடு சேர்த்து வைத்துக் கொள்வது மரபு. ஆதித்தன் மகன் கம்பரை,

அம்புநாட் டாம்வான் அடிபணியு மாதித்தன்
கம்பநாட் டாம்வான் கவி.

என்றாற்போல் அம்மெய்யனின் மகனை இவர் அம்மெய்யன் நாகனர் என்றழைக்கப்பட்டார். அம்மெய்யன் என்பது அழகிய மேனியன் என்றும் விரும்பத்தக்க வாய்மையாளன் என்றும் பொருள்படும். மேனிப் பொலிவினும் மெய்ம்மைப் பொலிவால் பெற்ற பெயரே கற்றவரைக் கவருந் தன்மையது. அம்மெய்யனர் பலரும் விரும்பத்தக்க வாய்மையாளராக வாழ்ந்ததால் இச் சிறப்புப் பெயர் பெற்றார் எனக் கருதலாம். கன்னட நாட்டிலும் இப் பெயர் கொண்டோர் இருந்தனர். அம்மய்யன் என்பவன் கட்டிய கோவில் ஒன்று கன்னடக் கல்வெட்டில் (Ep. C. Vol-8) குறிப்பிடப்படுகிறது.

22. அரிசில் கிழார்:

அரிசில் கிழார் பதிற்றுப்பத்தின் எட்டாம்பத்தைப் பாடியவர். புறநானூற்றில் ஐந்து பாடல்களும் குறுந்தொகையில்

193 ஆம் பாடலும் இவர் பாடியனவாகக் காணப்படுகின்றன. கொள்ளிடத்தின் வடபாலுள்ள அரியில் அல்லது அரியிலூர் என்பதே பண்டைக் கால அரிசில் என்னும் ஊர் என்கின்றனர். கன்னட நாட்டிலும் அரிசிகரெ என்னும் ஊர் உள்ளது. அரிசில் என்னும் ஊர்ப் பெயரால் அரிசில் கிழார் என்றழைக்கப் பட்டார். கிழான் என்பது உடைமையாளன் என்றும் உரிமை யாளன் என்றும் பொருள்படும் சொல். குறித்த ஒருவனின் வாணுள் வரை உள்ளது உடைமை. வழிவழி வருவது உரிமை. வழிவழி உரிமையாய்ப் பரிசிலரும் வீரரும் பெற்ற ஊர்கள் அவ்வப் பரிசிலர் அல்லது வீரர் பெயரால் அழைக்கப்படுகின்றன. கூத்தன் பெற்ற ஊர். கூத்தப்பாடி எனவும் பாக்கன் என்னும் வீரன் பெற்ற ஊர் பாக்கனூர் (இப்பொழுது மாக்கனூர்) எனவும் தருமபுரி மாவட்டத்தில் வழங்கி வருகின்றன. கொண் கானத்தை ஆளும் உடைமையாகப் பெற்றவன் கொண்கானங் கிழான் எனப்பட்டான். மையூர் கிழானும் இத்தகையவனே. கிழார் என்பது வேளாளரின் பட்டப் பெயர் (தொல். பொ. 629 உரை). இழு என்பது கன்னடத்தில் சிறு நிலப்பகுதியைக் குறிக்கும். மலையாளத்தில் கிழார் என்னுஞ் சொல் பண்ணையை (estate)யும் தோட்டத்தையும், கிழான் என்னும் சொல் பண்ணையக் காரனையும் குறிக்கும். கிழான் என்னும் தமிழ்ச் சொல் வட இந்திய மொழிகளில் கிசான் உழவன் எனத் திரிந்து வழங்குகிறது. அரிசில் கிழார் அவ்வூரில் பெரு நிலக்கிழாராக இருந்தவராதல் வேண்டும். அரிசில் கிழாரின் இயற்பெயர் தெரிந்திலது.

ஆங்கிலேயரின் பெயர்களில் பிரான்சிசு, பிராங்கு டெமிடரியசு என்பன உரிமையாளர், கிழார் என்னும் பொரு ளுடையனவாதலை ஒப்பிட்டுக் காண்க.

## 23. அருமன்:

அருமன் நற்றிணை 367 ஆம் பாடலிலும் குறுந்தொகை 293 ஆம் பாடலிலும் குறிக்கப்படுகிறான். இவனுடைய ஊர் மூதில் அருமன் பேரிசைச் சிறுகுடி எனப்படுகிறது. அருமன் என்னும் சொல் அன்புக்குரியவன், அழகன், சிறந்தவன், கிடைத்தற்கரிய மேன்மையாளன் என்னும் பொருள்களை உள்ளடக்கியது. அரு—அருமை = அளவிறந்த பற்று அல்லது மதிப்பு, பெருஞ்சிறப்பு, எளிதில் பெறற்கரியது என்னும் வேர்ப் பொருளுள்ளது.[1] அருமை—பேராண்மை (கலி. 104. உரை).

---

1. மொழிஞாயிறு பாவாணர் வேர்ச்சொல் கட்டுரைகள் (பக். 18.)

க. அருமெ—அன்பு, விருப்பு. தெ. அரிமி—அன்பு.

ம. அரும—அன்பின் பெருக்காகிய செல்லம்; ம. அருவ—அழகு.

பிராகுவி. அர்வத்—மனைவி.

துளு நாட்டில் ஆடவர் அர்ணன் எனப்பெயரிட்டுக் கொள்கின்றனர். சேலம் மாவட்டத்தில் திருமணத்தில் மங்கல வினையாற்றுவோரை அருமைக்காரர் என்றும் அண்ணியை அருமையாள் என்றும் அழைக்கின்றனர். சிறந்தோன் மேலோன் எனப் பொருள்படும் சமற்கிருதச் சொற்களான அர்ய, ஆர்ய என்பவற்றுக்குச் செல்லவிடு, போகவிடு எனப் பொருள்படும் 'ரி' என்பதை மூலமாகக் காட்டுகின்றனர்.[2] அரு என்னும் தமிழ்ச் சொல்லே ஆர்ய என்னும் வட சொல்லுக்கு மூலமாதல் வேண்டும். ஏனெனில் சமற்கிருதத்தில் வழங்கும் ஆர்ய, அர்ய என்னுஞ் சொற்கள் ஆரியரை மட்டுமன்றி. உயர் வருப்பார் மூவர்க்கும் புத்தனுக்கும் பொதுப் பெயராக வுள்ளது. கன்னடத்திலும் அர்ய என்னுஞ்சொல் தலைவன் என்று பொருள் படுகிறது. அருவா நாட்டுத் தமிழரைத் தெலுங்கர் அருவர் என்றனர். அருமன் என்பானுக்கு உரிய நாடாக ஒரு காலத்தில் விளங்கியதால் அதற்கு அருவா நாடுஎனப் பெயர் வந்திருத்தல் கூடும். அர்மெ கொண்ட என்பவன் கன்னடக் கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகிருன்.[3] அன்புக்குரியவன், சிறந்தவன், உயர்ந்தவன் என்னும் பொருள்களில் ஆண்பாற் பெயராக வரும் மனோகர் சேகர் என்னும் சமற்கிருதப் பெயர்களும், கபீர், லியாகத், அக்பர், யாகூப் என்னும் முகமதியப் பெயர்களும் அகத்தசு (Agustus) கிளாரன்சு என்னும் கிறித்தவப் பெயர்களும் இங்கு ஒப்பிடத்தக்கனவாம்.

24. அருவந்தை :

அருவந்தை புறம் 385ஆம் பாடலிலும் திவாகரத்திலும் ஈகையுள்ளஞ் சான்ற ஏந்தலாகக் குறிக்கப்படுகிருன். இவன் அம்பர் கிழவன் நல்லருவந்தை எனப்படுகிருன். அருமன் என்னும் இயற்பெயர்ப் பொருளில் அருவன் என்பதும் இயற் பெயராக நிலவியதை இச் சொல் காட்டுகிறது. அருவன்+ தந்தை—அருவந்தை ஆயிற்று அல்லது அருவன்+எந்தை அருவந்தை ஆயிற்று என்பது இங்கு ஐயுறவைத் தோற்றுவிக்

2. Monier williams Sanskrit English Dictionary.
3. Kannada inscriptions of Andhrapradesh. (p. 932.), 1962

கிறது. தந்தை முறையைச் சுட்டும்போது இன்னாரின் தந்தை என்று தெளிவாகச் சுட்டும் வழக்கம் கடைக்கழகப் புலவரிடை நிலவியது. நற்றிணை 190 ஆம் பாடலில்,

"......................சேந்தன் தந்தை
தேங்கமழ் விரித்தார் இயல்தேர் அழிசி"

எனத் தெளிவாகக் குறிப்பிடப்படுதலைக் காண்கிறோம். எங்கள் தந்தை போல்வான் என்னும் மதிப்புறவுப் பொருளில் எந்தை என்னும் சொல் பெருக வழங்கப்படுகிறது. ஔவையார் அதியமானை 'ஆசாகு எந்தை' என்கிறார். இயற்பெயரோடு எந்தை மதிப்புறவு குறித்த ஈறாகச் சேர்ந்து அருவன்+எந்தை—அருவந்தெ, சாத்தன்+எந்தை—சாத்தந்தெ என மருவியதாகக் கொள்ளலாம். திரவிடமொழிகளுள் ஒன்றான கொலாமி மொழியில் பெரியப்பாவை பெரெந்தை (பெரு+எந்தை) எனக் கூறுதலை இதனோடு ஒப்பு நோக்குக. அருவன்+தந்தை—அருவந்தை எனப் பிரித்துப் பொருள் கொள்ளும்போது அருவன் என்பது மகன் பெயராக நின்று அவன் தந்தையை இங்குச் சிறப்பாகக் குறிக்கவேண்டிய இயற்பெயர் விடுபடலாமா. சேந்தன் தந்தை அழிசி என்றாற்போல் அருவன் தந்தையின் பின் இயற்பெயர் ஏன் கூறப்படவில்லை என்ற வினா எழுகிறது. ஆதலால் அருவன் என்பதே இவ் வள்ளலின் இயற்பெயர் என்றும் எந்தையின் திரிபான அந்தை மதிப்புறவு குறித்த பெயரீறு என்றும் கொள்வது பொருந்தும். 'கந்தவேள் ஐயா இருக்கிறாரா?' என ஐயா என்னும் சொல்லை மதிப்புறவு கருதிப் பெயரொடு சார்த்தி வழங்கும் வழக்கம் இன்றும் நிலவுவதைக் காணலாம்.

## 25. அல்லங்கீரனார்:

அல்லங்கீரனார் நற்றிணையில் 245 ஆம் பாடலைப் பாடியவர். அல்லம் என்னும் ஊர் மலையாளத்தில் அல்லனம் என்னும் பெயரில் இருப்பதாக நற்றிணை உரையாசிரியர் குறிப்பிடுகிறார். இதனால் இவரைச் சேரநாட்டுப் புலவர் என்பர். கீரங்கொற்றனார் என்றாற்போன்று அல்லங்கீரனார் அல்லன் என்பானின் மகனாதலும் கூடும். அல்லன், அல்லமன், அல்லப்பன் என்னும் இயற்பெயருடையார் பலர் உளர். கன்னட நாட்டுத் திப்டூரில் கிடைத்த கல்வெட்டில் அல்லப்ப(ன்) என்னும் பெயர் காணப்படுகிறது.[4] கீரன் என்னுஞ்சொல் பழையன் என்று பொருள் படும். இதன் விளக்கத்தைக் கீரன் என்னுஞ் சொல்லின் கீழ்க் காண்க. அல்லன் என்னும் சொல் கரியவன் என்றும் நெருங்கி

4. Epigraphica carnatica - XII ; 1285.

யவன் என்றும் பொருள்படும். இதுவேயன்றி இளையன் மெல்லி யன் என்றப் பொருள்களும் இச் சொல்லுக்குக் கன்னட தெலுங்கு மொழிகளில் உள்ளன.

26. அவிநயன் :

அகத்தியரின் பன்னிரு மாணவருள் ஒருவர் அவிநயனுர் என்னும் பெயரினராயிருந்தார். அவிநயனுர் என்னும் மற்ருெரு புலவர் அவிநயம் என்னும் யாப்பிலக்கணம் இயற்றினுர். அவிநயர் என்போர் கூத்தர் என்று சூடாமணி நிகண்டு கூறு கிறது. சாந்திக்கூத்தின் நாற்பகுதிகளில் ஒன்று அவிநயக் கூத்து என்று மலையாளத்தில் கூறப்படுகிறது. அவிநயக் கூத்து (சிலம்பு 3 : 12) அவிநயக்களம் (சிலம்பு 14 : 152) என்பவை நாட்டியத் தொடர்பான சொற்கள். அவிதல் – பாகமாதல், செம்மையாதல் என்னும் பொருளுடைமையான் அவிநயம் கூத்தைக் குறிக்கும் சொல்லாயிற்று என்பர்.

அவிநயன் வடமொழிப் பெயராயின் நட்டுவனுர் என்னும் பொருளில் அவிநயம் கற்றுத்தரும் ஆடலாசிரியர்க்கன்றிப் பிறர்க்குப் பெயராகாது. அவிநயனுர் யாப்பிலக்கணம் எழுதிய வர். கூத்தைப்பற்றி எழுதவில்லை. சமற்கிருதத்தில் அபிநய என்னுஞ் சொல்லை அபி+நீ எனப் பிரிப்பர். இதற்கு அருகில் கொண்டுவா என்று பொருள். இதைவிட, செம்மையாக்கும் விருப்பம் என்று பொருள்படும் அவிநயம் என்னுந்தமிழ்ச் சொற்புணர்ப்பே சமற்கிருதச் சொற்பொருளினும் விஞ்சி நிற் கிறது.

அவி என்னும் தமிழ்ச்சொல் ஒளிதல் மறைதல் என்னும் பொருளில் பெருக வழங்குகிறது. கன்னடத்தில், 'அவிது கொண்டனு' என்ருல் ஒளிந்து கொண்டான் என்று பொருள். இதன்படி, அவிநயன்—உணர்வுகளை ஒளியச்செய்து நயப் புறுத்துவோன், உணர்ச்சிகளை அடிக்கடி மாற்றி (மறையச் செய்து) நயப்புறுத்துவோன் என்று பொருள்படுகிறது. அவி நயம்—(உணர்ச்சிகளை) மாற்றும் விருப்பம் என்று சுருக்கமாகப் பொருள்படுதலைக் காணலாம். எனவே அவிநயன் என்னும் இயற்பெயர் செம்மையாக்கும் விருப்பினன் என்னும் பொருளில் வழங்கிய இயற்பெயராகவும் கூத்துக்கலையில் வல்லவர்க்குத் தொழில் பற்றி வந்த பொதுப்பெயராகவும் வழங்கியது எனத் தெரிகிறது.

27. அவியன் :

அவியன் என்னும் ஈகையாளனை மாருெக்கத்து நப்பசலை யார் புறம் 383 ஆம் பாடலில் 'கான்கெழு நாடன் கடுந்தேர்

அவியன்' என்று பாடுகிருர். இவன், 'களிமலி கள்ளின் நற்றேர் அவியன்' என அகம் 271 ஆம் பாடலில் குறிப்பிடப்படுகிருன். அவி என்பது ஆடுகளை அல்லது ஆட்டு மந்தையைக் குறிக்கும் பெயர்ச்சொல். அவிகோப்ப (அவிகாப்போன்) என்னும் கன்னடச்சொல் ஆடுகளைக் காக்கும் இடையனைக் குறிக்கிறது.[5] ஆட்டுக்கிடையைக் குறிக்கும் அவிக்கிடை என்னும் தமிழ்ச்சொல் சமற்கிருதத்தில் avikaṭa என வழங்குகிறது.

தமிழ் மலையாளம் கன்னடம் தெலுங்கு ஆகிய நான்கு திரவிட மொழிகளிலும் அவி என்னும் வினைச்சொல், கெடுதல் ஒளிதல் மறைதல் பதுங்குதல் அடங்குதல் என்று பொருள் படுகிறது. கோழி அவியத்திலிருக்கிறது என்னும் உலகவழக்கை நோக்குக. இத் தலைமை வேர்ப்பொருளின் (Primary root) அடியாக இவ் வினையை ஏற்கும் அல்லது வினைக்குதவும் பொருள்களும் உயிரிகளும் தொழிற்பெயர்களாகவும் தொழிலாகு பெயர்களாகவும் இருமடி மும்மடி ஆகுபெயர்களாகவும் வழங்கும். இவ் வழக்கின்படி, ஆளைக்கண்டால் ஓடிப் பதுங்கிக் கொள்ளும் பல உயிரிகளும் ஓடிப் பதுங்கிக்கொள்ள உதவும் குகை, மலை, வீடு போன்ற தங்குமிடங்களும் அவி என்னும் பொதுப்பெயர் பெறும். ஆதலாற்றான், அவி என்னுஞ்சொல் ஆடு, எலி, சுற்றுவேலி, போர்வை, வீடு, மலை ஆகிய பொருள்களில் திரவிட மொழிகளில் ஆளப்படுகிறது. சமற்கிருதத்தில் அவி என்னுஞ் சொல் சிறப்பாக ஆடுகளைக் குறித்தாலும் அது தமிழ்ச்சொல்லே என்பதில் ஐயமில்லை. கூண்டில் ஒடுங்கும் பறவைகளும் அவி எனப்பட்டன. இச் சொல்லாட்சி இலத்தீன் மொழியில் உள்ளது.

avis—bird, avicula—little bird,

avicularius—bird keeper.

சமற்கிருதத்தில் அவி என்னுஞ் சொல் பறவையைக் குறிக்கவில்லை. பறவையைக் குறிக்கும் இலத்தீன் சொல்லிலிருந்து aviation என்னும் ஆங்கிலச்சொல் தோன்றியது. தமிழில் அவியன் ஆண்பாற் பெயராக இருப்பது போன்றே ஆங்கிலத்திலும் அவ (Ava) இலத்தீனிலிருந்து வந்த ஆண்பாற் பெயராக வழங்குகிறது.[6]

(தொடரும்)

---

5. திருமலார்ய – அப்ரதிமவீரசரித, கர்னடக காவ்யமஞ்சரி 1945.

6. Some English personal names. Chambers Twentieth Century Dictionary.

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

10. எல்லா !

தனியுயிரான ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்னும் இயற்கை நெடிலைந்தும் விளியசைகளாகப் பயன்படும். ஆதலால் விளியுருபாக அமையும். இவற்றுள், ஈ, ஊ என்னும் இரண்டும் பெரும்பாலும், முறையே இகர உகரங்களின் நீட்டமாகவேயிருக்கும். எவ்வுயிராயினும், சேய்மை விளியெல்லாம் நெடிலாகவேயிருத்தல் கூடும்.

விளியசைகள், முன்னசை பின்னசை என இருவகைப்படும். 'ஆ' முன்னசையாக வருவதில்லை. 'ஏ' 'ஓ' இரண்டும் முன்னசையாகவும் பின்னசையாகவும் வரும்.

எ-டு. ஏ முருகா ! ஏ தங்கம் ! (முன்விளி)

ஏ. ஏ அண்ணே ! ஏ அரசே ! (இருதலை விளி)
தாயே ! கடவுளே ! (பின்விளி)

ஓ. ஓ ஐயா ! ஓ பெண்ணே ! (முன்விளி)
ஓ மாதோ ! ஓ மன்னோ ! (இருதலை விளி)
அம்மோ ! அண்ணோ ! (பின்விளி)

இனி, பெயரோடு சேர்ந்தன்றித் தனித்தும் ஏயும் ஓவும் யகர மெய்யொடு கூடி விளியசையாக வரும்.

எ-டு. ஏய் ! இங்கே வா. (சிறுவரையும் இழிந்தோரையும் நோக்கிக் கூறுவது. இது இருபாற்பொது.) இது 'ஏ' என்றுங் குறுகும். எ-டு. ஏ ! போ.

ஓய் ! எங்கே போகிறீர்? (ஒத்த ஆடவரை நோக்கிச் சற்று மதிப்பாகக் கூறுவது).

இது சொற்றொடர் முன்னன்றிப் பின்னும் வரும்.

எ-டு. இங்கே பாரும் ஓய் !

இது வேய்—வே என்றும் திரியும்.

எ-டு. என்ன வே ! இப்படிச் சொல்கிறீர்?

பெயரீற்று ஓகார விளியசை ஏகார விளியொடு இணைந்தும் ஆகார விளியொடு கூடியும் வரும்.

எ-டு. அம்மேயோ, அண்ணாவோ.

'ஆவோ' இணைவிளி லகரமெய் யடுப்பது முண்டு.

எ-டு. சாத்தாவோல்.

இதை ஒரு புடையொத்து, ஏகார முன் விளியும் லகரமெய் யடுத்து ஏல் என நின்று, இரு பாற்கும் பொதுவாகும்.

ஏல் என்பது எல்—எல்ல—எல்லா என்று திரிந்து, அகப் பொருட் செய்யுட்களில் இருபாற் பொது விளியாய் வழங்கும்.

"முறைப்பெயர் மருங்கிற் கெழுதகைப் பொதுச்சொல்
நிலைக்குரி மரபின் இருவீற்று முரித்தே."
(தொல். பெ. பொரு. 26)

"இது, கிழவன் கிழத்தி பாங்கன் பாங்கியென்னு முறைப் பெயராகிய சொல்பற்றிப் பிறந்ததோர் வழு அமைக்கின்றது.

"இதன் பொருள் :—முறைப் பெயரிடத்து இரு பாற்கும் பொருந்தின தகுதியை யுடைய எல்லா வென்னுஞ்சொல், புலனெறி வழக்கிற்குரிய முறைமையினானே வழுவாகாது, ஆண் பாற்கும் பெண் பாற்கும் ஒப்ப உரியதாய் வழங்கும் என்றவாறு.

"கெழுதகை' என்றதனானே, தலைவியும் தோழியும் தலைவனைக் கூறியதே பெரும்பான்மை யென்றும், தலைவன் தலைவியையும் பாங்கனையுங் கூறுதல் சிறுபான்மை வழுவமைதி யென்றும், கொள்க.

(உ-ம்.)

"அதிர்வில் படிறெருக்கி வந்தென் மகன்மேன்
முதிர்பூண் முலைபொருத வேதிலாண் முச்சி
யுதிர்துக ளுக்கவின் றுடை யொலிப்ப
வெதிர்வளி நின்றாய்நீ செல்;
இனியெல்லா" (கலி. 81)

எனத் தலைவியைத் தலைவன் இழித்துக்கூறலின் வழுவா யமைந்தது.

"எல்லாநீ
முன்னர்த்தா னென்று குறித்தாய்போற் காட்டினை
பின்னின் விடாஅ நிழல்போற் றிரிதருவா
யென்னி பெறுதநீ தென்" (கலி. 61)

எனத் தோழி தலைவனை விளித்துக் கூறலின் வழுவாயமைந்தது.

" 'எல்லா விஃதொத்தன்' (கலி. 61) என்பது பெண்பால் மேல் வந்தது. ஏனைய வந்துழிக் காண்க. 'பொதுச்சொல்' என்றதனானே எல்லா எலா எல்ல எலுவ எனவும் கொள்க.

"எலுவ சிருஅர்" (குறுந். 129) என வந்தது.

"யாரை யெலுவ யாரே" (நற்றிணை 395)

எனத் தலைவனைத் தோழி கூறினாள்.

எலுவி யென்பது பாலுணர்த்தலின் ஆராயப்படா (நச்சினார்க்கினியர் உரை).

இவ்வுரையிற் சில கூற்றுக்கள் பொருந்தாமை அறிஞர் கண்டுகொள்க.

"பொதுச்சொல்" என்றும், "நிலைக்குரி மரபி னிருவீற்று முரித்தே" என்றும், தொல்காப்பியர் கூறியுள்ளமையால், எல்லா என்பது தலைவன் தலைவியர் இருவரும் ஒருவரை யொருவர் விளிக்கும் இருபாற் பொதுச்சொல் என்பது தெளிவாம்.

தெலுங்கில் ஒகார விளிச்சொல் பின்வருமாறு நால்வடிவு கொள்ளும்.

ஒயி—ஒத்தோரை விளிக்கும் முன் விளியசை.

ஒரி—இழிந்தோரை விளிக்கும் முன்விளியசை.

"ஏமிரா ஒரியென்பாள் எந்துண்டி வஸ்தியென்பாள்"
(காளமுகில் தனிப்பா.)

ஒலி—மனைவியையும் இழிந்த பெண்டிரையும் விளிக்கும் முன்விளியசை.

ஒரை—மிக இழிந்தோரை விளிக்கும் முன் விளியசை.

ஏல் என்னும் விளிச்சொற் றிரிபுகள்

ஏல்—எல்—எல்ல.

எல்ல என்னுஞ்சொல் வழக்கிறந்தது; இலக்கியமும் இறந்துபட்டது.

எல்ல—எல்லா. இது மேற்கூறப்பட்டது.

எல்லா—தோழீ. "கடைமணி யின்குரல் காண்பென் காண் எல்லா" (சிலப். 20 : 3). எல்லா—எல்லாவோ=தோழீ. "எல்லாவோ காதலற் காண்கிலேன்" (சிலப். 18 : 11-12).

எல்—எல்லே=தோழியை விளிக்குஞ் சொல்.

"கொடிய என்னெஞ்சம் அவனென்றே கிடக்கும் எல்லே"
(திவ். திருவாய். 5 : 3 : 5)

எல்—எல்லோ=வியப்பும் இரக்கமும் உணர்த்தும் இடைச்சொல் (நெல்லை வழக்கு).

எல்—எல. இது தமிழில் வழக்கற்றது.

எல—எலா. இதுவும் தமிழில் வழக்கற்றது.

எலா, எலா என்னும் இரு சொற்கள், இருபாற் பொது விளிகளாகத் தெலுங்கரிடை வழங்கி வருவதாகச் சொல்லப் படுகின்றது.

எல என்பதையும், அதன் திரிபான சில சொற்களையும் பற்றி, கிற்றல் கன்னட அகரமுதலி பின்வருமாறு கூறுகின்றது.

க. எல (ela)=உடன்படுதலைக் குறிக்கும் ஓர் இடைச்சொல்.

„ எலகெ (elage)=பெண்டிரை விளிக்குஞ் சொல்.

„ எலவோ, எலவோ = வலிமிக்க வியப்பிடைச் சொற்கள்.

„ எலா=நண்பரை அல்லது நெருங்கிப் பழகியவரை விளிக்குஞ் சொல்.

„ எலெ, எலே=எலா.

„ எலெகெ (elege)=பழகிய பெண்டிரை விளிக்குஞ் சொல்.

„ எலொ, எலோ=எலா.

எல்—எலு—எலுவ—எலுவன்=தோழன். (திவா.)

எலுவன்—எலுவல்=தோழன். "அரவெழுதிய கொடியுடையவ னெலுவலும்" (பாரத. பதினாறாம். 28).

எலுவன்—எலுவ (விளிவே.)

எலுவன்—எலுவை=தோழி. "உனக்கெலுவை யாகுவதெ னெண்ணம்" (பாரத. நாடுகரந். 33).

எலுவன்—எலுவி=தோழி. (தொல். பொரு. 26, நச். உரை.)

ஏல்—ஏல, ஏலே=சிறுவனையும் இழிந்தோனையும் விளிக்குஞ் சொல். (தெ. வ.)

ஏல்—ஏலா=1. மனைவியை விளிக்குஞ்சொல். (கரூர். வ.) 2. தோழன் தோழியரை விளிக்குஞ்சொல் "குறவன் மகளாணை கூறேலா கூறே" (பரிபா. 8 : 69), "ஏலாவிது காணுயென" (கந்தபு. அசமுகிப். 12).

ஏல—ஏழ
ஏலா—ஏழா } =தாழ்த்தப்பட்டோர் மனைவியை விளிக்குஞ் சொல். (தெ. வ).

ஏழ—ஏட=தோழனையும் தாழ்ந்தோனையும் விளிக்குஞ் சொல்.

ஏட—ஏடன்=1. தோழன். (யாழ். அக.). 2. அடியான், தொழும்பன். "ஏடர்களை யெங்கு மாண்டுகொண்ட வியல்பறிவார்" (திருவாச. 43 : 4).

ஏட (விளிவே.)—தோழனையும் தாழ்ந்தோனையும் விளிக்குஞ் சொல்.

"ஏடா வழிய லெழுந்திது கொள்ளாய்" (மணி. 14 : 12.)

ஏடே=ஏடா!

ஏட—ஏடி=தோழியையும் இழிந்தோனையும் விளிக்குஞ் சொல். (சிலப். 17 : 28, உரை).

ஏடி—ஏடீ (ஏடி யென்பதன் நீட்டல்).

ஏட—ம. எட, எடா=சிறுவனையும் இழிந்தோனையும் விளிக்குஞ் சொல்.

ம. எட—எடன்=சிறுவன், பையன்.

ம. எடி—எடீ=சிறுமியையும் இழிந்தோனையும் விளிக்குஞ் சொல்.

ஏட—எட—அட=1. சிறுவனையும் இழிந்தோனையும் விளிக்குஞ் சொல். அட பயலே! 2. கழிவிரக்கம் பற்றிய இடைச் சொல். "அட கெடுவாய் பல தொழிலு மிருக்கக் கல்வி யதிக மென்றே கற்றுவிட்டா யறிவில்லாமல்" (படிக்காசுப் புலவர். தனிப்பா.)

அட—அடா, அடே, அடோ=சிறுவனையும் இழிந்தோனையும் விளிக்கும் விளிகள்.

அடா அடா=அடடா (ஓர் இரக்க வியப்புக்குறிப்பிடைச் சொல்).

அட—அடி=சிறுமியையும் மனைவியையும் தோழியையும் இழிந்தோளையும் விளிக்குஞ் சொல். அடி மூழி! என்ன செய் தாய்?,

"நந்த வனத்திலோ ராண்டி—அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டு வந்தானொரு தோண்டி—அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி"

(சித்தர் பாடல்)

உடைத்தான்+அடி=உடைத் தாண்டி.

"என்னடி நான்பெற்ற மங்கை" (அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்து), எட்டி நில்லடி!

அடி—அடீ=(அடி என்பதன் நீட்டம்).

அடா—டா—ரா (தெ.).

"ஏமிரா ஓரியென்பாள்" (காள முகில்), இக்கடைவாடா= தெ. இக்கட ரார்ா.

அடோ—அரோ=ஒரு முவிட அசைச் சொல்.

"குயிலாலு மரோ".

"யாகா பிறபிறக் கரோபோ மாதிகும்
...    ...    ...    ...
அன்றும் தாம்தான் கின்றுமின் றசைமொழி"    (நன். 441)

அடே—வ. அரே. அடே—டே—வ. ரே.

வ. அரே அரே—அரேரே—அரரே.

மானியர் வில்லியம்சு சமற்கிருத—ஆங்கில அகரமுதலி அரே, அரரே, அரே ரே, ரே என்னுந் திரிசொற்கள் பற்றிப் பின்வரு மாறு குறிக்கின்றது:

அரே—ind. interjection of calling (VS).

அரரே—ind. a vocative particle (expressing haste)—L.

அரேரே—ind. (repetition of *are*) interjection of calling to inferiors or of calling angrily (L).

ஏ—ind. a vocative particle (generally used contemptuously or to express disrespect, often doubled)—Kāv; Kathas etc.

ind = indeclinable.

VS = Vājasneyi Samhitā வாஜஸ் நேயி ஸம்ஹிதா)

L = Lexicographers (அகரமுதலியாளர்)

Kāv = Kāvya literature (காவிய இலக்கியம்)

ஆங்கிலர் நண்பரைக் காணும்போது மகிழ்ச்சி விளியாக ஆளும் ஹலோ (ஹல்லோ) என்னுஞ் சொல், எல்லா என்னும் தென்சொல்லொடு தொடர்புடையதே.

*hallo*, *halloa*, int., n., and v. i. Int. calling attention or expr. surprise; informal greeting; (n. and v. i.) the cry 'hallo'. var. of earlier HOLLO.

*halloo*, int. inciting dogs to the chase, calling attention or expressing surprise; (n.) the cry 'halloo'; (perh.) var. of HOLLO; (v. i. and t.) Cry 'hallooi,' esp to dogs; urge on (dogs etc.) with shouts; shout (t. and i.) to attract attention.

*hallow*, v. t. and i. Chase with shouts; incite with shouts; shout to incite dogs etc. (ME).

*halowen* prok. f. OF *halloer*.

*hello*, n., and v. i. hallo.

*holla*, int. calling attention f. F. *hola*.

*hollo*, int. calling attention; (n.) the cry 'hollo'. (conn. w. HOLLA.

*hollo*, *hollow*, *holla*, *holloa*, v. i. and. t. shout (i. and t.); call to hounds (as prec).

*hullo*, *hulloa*, int. used to call attention, express surprise or answer call. esp. on telephone. cf HALLO.

'ஏல்' என்பது முதல் 'ஏ' என்பது வரை காட்டப்பட்டுள்ள பல்வேறு சொற்களெல்லாம், ஒரே தொடர்புள்ள கொடிவழிச் சொற்கள் என்பது தெள்ளத் தெளிவாம்.

அவற்றுள், 'ரே' என்னும் இறுதிநிலைத் திரிசொல் மட்டும் வடமொழி யிலக்கியத்தில், அதிலும் பெரும்பாலும் பிற்கால இலக்கியத்திலும் அகர முதலிகளிலும், வழங்குவதும்; முந்துநிலைத் திரிசொல்லான எல்ல (எல்லா) என்பதை யொத்த 'ஹல்லோ' என்னும் விளிச்சொல், ஆறாயிரம் கல் தொலைவிலுள்ள ஆங்கில நாட்டில் தொன்று தொட்டு வழங்கி வருவதும் கவனிக்கத்தக்கன.

ஆங்கிலச் சொல் வேட்டை நாயை ஏவும் சொல்லாகப் பயன்படுத்தப்படினும், விளியளவில் ஒன்றே யென்பதை அறிதல் வேண்டும்.

நூற்றுக் கணக்கான அடிப்படை ஆங்கிலச் சொற்கள் தென் சொல்லும் தென் சொற்றிரிபுமாயிருப்பதால், எல்லா என்னும் இருபாற் பொது விளிச்சொல் ஆங்கிலத்தில் வழங்கி வருதல்பற்றி ஐயுறுதற்கு எள்ளளவும் இடமில்லை.

குமரி நாட்டினின்று கங்கைக்கரை சென்ற பண்டைத் தமிழர் திரவிடராகத் திரிந்தபின், ஐரோப்பா வடைந்து ஆரியராக மாறியிருப்பதாலும், அவ்வாரியருள் ஒரு கூட்டத்தாரே வேத ஆரியரின் முன்னோராக இந்தியாவிற்கு வந்திருப்பதாலும், தென்சொற்களின் முந்து வடிவங்கள் மேலையாரிய மொழிகளிலும் பிந்துவடிவங்கள் கீழையாரியமாகிய வேத மொழியிலும் சமற்கிருதத்திலும் வழங்குவது இயற்கையே.

மேலையர் உலக முதன் மொழியாகிய தமிழை அடிப்படையாகக் கொள்ளாது அதன் திரிபுக் கொடுமுடியாகிய சமற்கிருதத்தையே மூலமாகக் கொண்டு ஆராய்ந்து வருவதால், மொழிநூல் பற்றிய அடிப்படையுண்மைகளை அறியாது, வழிதப்பிய சகாராப் பாலைநில வழிப்போக்கர்போல் அங்குமிங்கும் சுற்றிச் சுற்றி இடர்ப்படுகின்றனர். தமிழ் இயன்மொழி யென்றும் ஆரியம் அதன் திரிமொழியென்றும் அறியும்வரை, அவர் தம் குருட்டுக் கொள்கையில் நிலைத்தே நிற்பர். அக் குருட்டாட்டம் நீங்குங் காலமும் அடுத்து வருகின்றது.

———

# A Valuable Madras Library

*N. S. Ramaswami*

The Maraimalai Adigal Library is one of the ornaments of the intellectual scene in Madras. Its collection of 35,000 books mainly on the literature and history of the Tamils has proved very valuable to students and scholars.

Its location is rather unusual. One does not generally expect a big library in north Madras, where space is scarce. Nor does one expect to find such a large collection of books in a building which, seen from the outside, looks like a private residence. But these are incidental detalls. What counts is the value and number of the books available.

The library is being maintained by the Tirunelveli Saiva Siddhanta Works Publishing Society, which is among the largest publishers of Tamil works today, with over two thousand titles to its credit. Its moving spirit is *Mr. V. Subbiah Pillai*, whose four score years sit lightly on him. A man of farsighted vision and abounding energy. Mr. Subbiah Pillai has fostered the library since its inception in 1958 with loving care. He has found a valuable auxiliary in his son-in-law, *Mr. Muthukkumaraswami.*

There is an old world air about the library, but it is also easy to see that it is being maintained with full modern efficiency. At the entrance there is a fine bronze image of Lord Nataraja. Nearby a plaque on the wall states that Sri Ramalinga Swamigal delivered his first discourse in Madras in this building. These are high auspices.

The architecture of the building is of olden times, but not any the less convenient or "functional" for that. The books are located in two storeys. They relate to almost every aspect of Indian, particularly Tamil, life and antiquity. There is God's plenty for the student here.

The library was inaugurated on August 24, 1958. Its nucleus was a collection of 4,000 books of Swami Vedachalam, known as Maraimalai Adigal, and another of five hundred belonging to Professor V. Rangachari The Saiva Siddhanta Works Publishing Society added 5,000 of its own. It was a good beginning. But what is striking is that the progress since has been steady.

The library has a number of old Tamil books, which would rejoice the bibliophile. The oldest is dated 1749 and was published in Halle, the German town. To the same eighteenth century belong two dictionaries of "Malabar", as Tamil was then called, and English, dated 1779 and 1786.

There is a large collection of "Tirukkural" in a number of languages, Indian and European. Some of these languages are, apart from English, Latin, French, Chinese, Fijian, Malay, Burmese, Sinhalese and Russian

The original Tamil copies of "Tiruvachagam", "Tirukkural" and "Naladiyar" which Dr. G U. Pope used in his English translations of these works are on display Pope has divided the lines into easy parts and added notes on the margin.

But what may be considered the less spectacular part of the library consists of books, both in English and Tamil, which the student of Indology requires. Maraimalai Adigal had wide ranging tastes, and his books belong to many disciplines; literature, philosophy, religion, the arts, sociology and the like. Many of the books bear close marks of study, for they carry his annotations.

There are large runs of many an old and famous journal, now no longer in existence. They are of the first importance to the student of a developing discipline like Tamil studies.

The value of the library has been recognised so well that a number of scholars, a few of them foreign, are working there. They receive every facility possible. Their subjects range over a wide field They all recognise their indebtedness to this great storehouse of knowledge.

The Saiva Siddhanta Works Publishing Society also maintains libraries in Pallavaram and in Tirunelveli. The former is located in Maraimalai Adigal's old residence. The latter, one of the oldest in south Tamil Nadu, contains over 12,000 books.

The society devotes a part of its profits to the running of these libraries, an unusual piece of literary support on the part of publishers. But then the society is unusual in many

respects. It has been publishing Tamil books for many decades now, not merely as a business venture, but in a spirit of dedication. It is animated by high ideals.

Mr. Subbiah Pillai is a man of vision. Combining it with practical idealism, he has made the society a force to reckon with in Tamil letters today. He is fortunate in that society has recognised the value of his labours. He can look back on a life-time of achievement. The Maraimalai Adigal Library is one of his gifts to the country.

SUNDAY STANDARD, 30—4—78

## சென்னை மாநகரின்
## ஒரு பயன்மிகு நூலகம்

சென்னையின் அறிவுலக அணிகளுள் ஒன்றாகத் திகழ்வது மறைமலையடிகள் நூல்நிலையம். தமிழர் இலக்கியம், வரலாறு தொடர்பான அதன் 35,000 நூல்களின் தொகுப்பு மாணவர்கட்கும் அறிஞர்கட்கும் மிகவும் பயனுடையது என்பதை நிறுவியுள்ளது.

அஃது அமைந்திருக்கும் இடம் சற்று மாறானது. வட சென்னையில் ஒரு பெரிய நூலகத்தை யாரும் பொதுவாக எதிர்பார்க்கமாட்டார்கள். அங்கே இடம் கிடைப்பது மிக அரிது. அல்லது வெளியிலிருந்து பார்ப்பதற்குக் குடியிருக்கும் இல்லம் போல் திகழும் ஒரு கட்டிடத்தில் இவ்வளவு பெரிய தொகுப்பு இருக்குமென்றும் யாரும் எண்ண முடியாது, ஆனால் இவை சிறு விவரங்கள்; புத்தகங்களின் எண்ணிக்கையையும் அவற்றின் பயனையும்தான் எண்ணிப்பார்க்க வேண்டும்.

இந் நூலகத்தை ஏறத்தாழ ஈராயிரம் அரிய நூல்களை வெளியிட்டதும் மிகப்பெரிய தமிழ்நூல் வெளியீட்டகங்களுள் ஒன்றுமான திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் நடத்திவருகிறது. அதன் உயிர்நாடியாகத் திகழும் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் தோள்கள்மீது நாற்பது ஆண்டுகட்கு மேற்பட்ட பணிச்சுமை மிக எளிதாக அமர்ந்துள்ளது. இந் நூலகம் தொடங்கப்பெற்ற 1958 ஆம் ஆண்டிலிருந்து இதனைக் கண்ணுங் கருத்துமாக அன்புடன் பேணி வரும் திரு. வ. சுப்பையாபிள்ளை உண்மையிலேயே வருவது முன்னுணரும் பார்வைத் திறனும் அளவுகடந்த ஆற்றலும் நிறைந்தவர். அவர்தம் மருகர் திரு முத்துக்குமாரசாமி வழி அவர் பயன்மிகு துணையைப் பெற்றுள்ளார்.

இந் நூலகம் பழைமையின் இருப்பிடம் என்பது போன்ற எண்ணம் பொதுவாக இருப்பினும் புதுமையான முறையில் மிகத் திறம்பட நடத்தப்பெறுகிறது. நுழைவாயிலில் ஆடும் பொன்னம்பலவாணரின் அழகிய திருவுரு அமைந்துள்ளது. அதனருகில் அமைந்துள்ள கற்பலகையில் வள்ளல் பெருமான் இராமலிங்கசுவாமிகள் முதன்முதல் சொற்பொழிவாற்றிய இடம் அஃது என்பது பொறிக்கப்பெற்றுள்ளது. இவை அதன் சிறந்த மங்கலச் செய்திகள்.

கட்டிட அமைப்பு பழங்காலத்தது. ஆனால் வசதியிலும் பயன் தருவதிலும் எவ்வகையிலும் குறைவானதன்று நூல்கள் இரண்டு தளங்களில் வைக்கப்பெற்றுள்ளன. அவை பெரும்பாலும் இந்தியா, குறிப்பாகத் தமிழ் வாழ்க்கை பழைமை ஆகியவற்றுடன் தொடர்புடையன. மாணவர்களுக்குத் தேவையான நூல்கள் இறையருளால் நிரம்ப உள்ளன.

நூலகம் 1958 ஆகஃச்டு 24 இல் தொடங்கப்பெற்றது. தொடக்கத்தில் சுவாமி வேதாசலம் என வழங்கும் மறைமலை வடிகளார் தொகுத்த 4000 நூல்கள், பேராசிரியர் வி ரங்காச்சாரியாரின் தொகுப்பான 500 நூல்கள் ஆகியவற்றுடன் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தொகுத்து வைத்திருந்த 5000 நூல்களையும் இணைத்து இந் நூலகம் தொடங்கப்பெற்றது. அது மிக நல்ல தொடக்கம். ஆனால், அதிலிருந்து இது சீராக வளர்ந்து வருவதுதான் வியப்புக்கும் பாராட்டிற்குமுரிய செய்தியாகும். நூலாய்வாளர்கள் கண்டு மகிழத்தக்க வகையில் எண்ணற்ற பழைய அரிய நூல்கள் நூலகத்தில் உள்ளன. மிகப் பழைமையான நூல் 1749 இல் ஜெர்மன் நகரான ஹாலந்தில் (Holland) அச்சிடப்பெற்ற தமிழ் நூலாகும். அதே பதினெட்டாம் நூற்றுண்டைச் சேர்ந்த "மலபார்" என்று அப்போது அழைக்கப்பெற்ற தமிழ்—ஆங்கில அகராதிகள் இரண்டு—1779, 1786 ஆண்டுகளில் அச்சானவை—நூலகத்தில் உள்ளன.

'திருக்குறளின்' இந்திய, ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பெற்ற பதிப்புக்கள் பெருமளவில் இங்குள்ளன. ஆங்கிலம் தவிர இலத்தீன், பிரெஞ்சு, சீனம், பிஜி, மலாய், பர்மீசு, சிங்களம், ருசியம் போன்ற மொழிகளில் மொழிபெயர்க்கப் பெற்றவை அவை.

டாக்டர். ஜி. யு. போப் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பயன்படுத்திய திருவாசகம், திருக்குறள், நாலடியார் ஆகியவற்றின் மூலநூல்கள் காட்சியில் இடம் பெற்றுள்ளன. போப் அடிகளைச் சீர் பிரித்துக் கோடிட்டுப் பக்கக்குறிப்பு எழுதி வைத்துள்ளார்.

இந்திய வரலாற்றுப் பண்பாட்டு ஆய்வுக்குத் தேவையான பல ஆங்கிலம், தமிழ் நூல்களும் இங்குள்ளன. மறைமலை யடிகள் பல்வகைச்சுவை பெற்றுத் திகழ்ந்திருக்கிருர். அவர் தொகுத்த நூல்கள் இலக்கியம், தத்துவம், சமயம், கலை, சமூக இயல் போன்ற பல துறைகளைச் சார்ந்தனவாயுள்ளன.

மிகப் பழைமையுடன் பெரும்புகழுமுடைய பல இதழ்கள்—இன்று வழக்கிலில்லாதவை—இங்குள்ளன. புதிதாக வளர்ந்து வரும் தமிழ் ஆய்வுத்துறைக்கு இவை முதன்மையாகத் தேவைப் படுவனவாகும்.

வெளிநாட்டறிஞர்கள் சிலருட்பட அறிஞர்கள் பலர் அங்கு வந்துஆய்வுப்பணியாற்றுகின்ற அளவிற்கு நூலகத்தின் பயன் நன்கு உணரப்பட்டுள்ளது. தேவையான அத்தனை வசதிகளை யும் அவர்கள் அங்குப் பெறுகின்றனர். அவர்களின் ஆய்வுப் பொருள்கள் பரந்துபட்டவை. அறிவின் கருவூலமாகத் திகழும் இந் நூலகத்திற்குத் தாங்கள் பட்டுள்ள நன்றிக்கடனை அவர்கள் நன்கு உணர்ந்திருக்கிருர்கள்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பல்லாவரத்திலும் திருநெல்வேலியிலும் இரண்டு நூலகங்களை நடத்துகிறது. முன்னது மறைமலையடிகளார் வாழ்ந்த மாளிகையில் அமைக்கப் பெற்றுள்ளது. பின்னது தமிழ்நாட்டின் தென்பகுதியில் மிகப் பழைமையானது - 12,000 நூல்களைக் கொண்டது.

வேறு எந்தப் பதிப்பாளர்களும் செய்யாத வகையில் கழகம் இலக்கிய வளர்ச்சிக்கு உதவும் வகையில் தனக்குக் கிடைக்கும் இலாபத்தில் ஒரு பகுதியை ஒதுக்கிவைத்து இந் நூலகங்களை நடத்தி வருகிறது இது தவிர வேறு பலவகைகளிலும் கழகம் தனித்து விளங்குகிறது. வாணிக நோக்கின்றிக் கடந்த அரை நூற்றுண்டுக்கு மேலாகத் தமிழுக்குப் பணிசெய்வதையே தன் கடனாகக் கொண்டு தமிழ்நூல்கள் பலவற்றைக் கழகம் வெளி யிட்டு வருகின்றது. உயர்ந்த கொள்கைகளால் அஃது உயர்வு பெற்றுள்ளது.

திரு சுப்பையாபிள்ளை சிறந்த குறிக்கோளையுடையவர். அத்துடன் நடைமுறைக் கொள்கைகளையும் இணைத்து இன்று தமிழ் எழுத்து உலகில் கழகத்தின் பெயரை நீக்கமுடியாத அளவிற்கு நிலைபெறச் செய்துள்ளவர் அவர். அவருடைய உழைப்பின் மதிப்பை இன்று கழகம் உணர்ந்து போற்று கின்றது. பயனுடைய தம் வாழ்நாள் சாதனைகளை அவர் திரும்பிப்பார்க்க முடியும். அவர் இந்த நாட்டிற்கு அளித்த கொடைகளுள் ஒன்று ‘மறைமலையடிகள் நூல்நிலையம்’.

———

## அறப்பணிச் செல்வர்
## தி. மூ. நாராயணசாமிப் பிள்ளை மறைவு

திருச்சிப் பெரியவரும், அண்ணாமலைப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தரும், செட்டிநாட்டரசர் இராசா சர். முத்தையா செட்டியார் அவர்களின் பெருமதிப்புக்குரியவருமான திரு தி. மூ. நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் 1978 மே 23 அன்று தம் சொந்த ஊரான திருச்சி தில்லை நகரிலுள்ள தம் இல்லத்தில் இயற்கை யெய்தினர்.



திருச்சியில் 1891 ஆகஸ்டு 19இல் தோன்றிய இவர் அங்குள்ள தூய யோசேப்புக் கல்லூரியிலும் பின் சென்னை மாநிலக் கல்லூரியிலும் பயின்று எம். ஏ. பட்டம் பெற்றார். சட்டப் படிப்பு பெற்றபின் அரசு வழக்குரைஞராக நீண்டகாலம் பணியாற்றினர்

தம் வாழ்வின் பெரும்பகுதியைப் பொதுப்பணியில் ஈடுபடுத்திக் கொண்ட இப் பெரியவர் 1927 இல் திருச்சி நகரத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1928 முதல் திருச்சி மாவட்ட ஆட்சிக்குழுத் தலைவராக 9 ஆண்டுகள் திகழ்ந்தார். அவர்தம் பொதுத் தொண்டினைப் பாராட்டி அரசு 'திவான்பகதூர்' என்ற பட்டத்தை வழங்கியது. 1940இல் இவர் இந்துசமய அறநிலையக் குழுவின் தலைவராக நியமிக்கப்பெற்றார். சென்னை அரசுப் பொதுத் தேர்வுக் குழுவின் தலைவராக ஒன்பது ஆண்டுகள் இவர் பணியாற்றி யுள்ளார்.

இவ்வாறு பல துறைகளில் இவர் ஆட்சிசெய்த திறனைப் பாராட்டிச் செட்டிநாட்டரசர் திரு பிள்ளை அவர்களை 1955இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக ஆக்கினர். ஆறு ஆண்டுகள் அப் பொறுப்பில் இவர் இருந்த காலத்தில் அப் பல்கலைக்கழகத்தில், கல்வி, மொழியியல் போன்ற முக்கியமான துறைகளைத் தொடங்கினர்.

கல்வித் துறையில் மட்டுமன்றிக் கூட்டுறவுத்துறையிலும் திரு. பிள்ளை பாடுபட்டுள்ளார். 1934 முதல் 1940 வரை திருச்சி மாவட்ட மத்தியக் கூட்டுறவு வங்கியின் தலைவராகப் பணிபுரிந்தார் 1955 இல் சென்னை அரசு தமிழ்நாட்டில் கூட்டுறவுத்துறை வளர்ச்சியடைவதற்குரிய வழிவகைகளைக் கூறுவதற்காக அமைத்த குழுவிற்குத் திரு. பிள்ளை அவர்கள் தலைமை தாங்கி அத் துறை தமிழ்நாட்டில் வேரூன்றி வளர வழி செய்தார்.

இவர் சென்னைச் சட்டப்பேரவையின் மேலவையில் 1924 முதல் 1936 வரை உறுப்பினராக இருந்தார். மீண்டும் 1952 முதல் 1958 வரை சட்டப் பேரவை உறுப்பினராகத் திகழ்ந்தார்.

இவையனைத்துக்கும் மேலாகச் செட்டிநாட்டரசர் அண்ணாமலைச் செட்டியாருடன் இணைந்து சென்னையில் தமிழ் இசைச்சங்கம் நிறுவித் தமிழ் இசை வளர இவர் செய்த தொண்டு மறக்க முடியாததாகும். எவ்வளவு பணிகளிருப்பினும் ஆண்டுதோறும் நடைபெற்ற இசை விழாக்களில் கலந்துகொண்டதோடு பண்ணாராய்ச்சி மாநாடுகளுக்குத் தலைமைதாங்கித் தமிழறிஞர்களுடனும் ஓதுவார் பெருமக்களுடனும் இசைப் பேரறிஞர்களுடனும் வாதத்தில் கலந்துகொண்டு பண்ணாராய்ச்சியை இவர் வளர்த்த பாங்கு யாவரும் போற்றுதற்குரியது. 1956 முதல் 22 ஆண்டுகளாக அச் சங்கத்தின் தலைவராகத் திகழ்ந்தார்.

இவருக்கிருந்த சமயப்பற்று பல கோயில் திருப்பணிகளில் இவரை ஈடுபடுத்தியது. 1964 முதல் 1977 வரை திருஆனைக்கா அன்னை அகிலாண்டேசுவரி ஆலயத் திருப்பணியில் ஈடுபட்டு அரும்பணியாற்றி 'மதில்பணிமணி' என்ற பட்டத்தைப் பெற்றவர் இவர். திருவரங்கப் பெருமான் திருக்கோயில் திருப்பணிக் குழுவின் தலைவராக விளங்கி வந்த இவர் இறப்பதற்குச் சற்று முன்னர்க்கூட அப் பணிக்காகப் பொருள் திரட்டும் வேலையாக வெளியில் சென்றிருந்தார்.

இப் பெருமகனாரின் எண்பதாண்டு நிறைவு விழா 6-9-72 இல் திருச்சிராப்பள்ளியில் டாக்டர் ராசா சர். முத்தைய செட்டியார் அவர்கள் தலைமையில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. அவ் விழாவில் மேனாள் வேளாண்மைத்துறை அமைச்சர் அன்பில் தருமலிங்கம், சென்னை, அண்ணாமலை, மதுரை ஆகிய முப் பல்கலைக் கழகங்களின் துணைவேந்தர்களான தாமரைச்செல்வர் நெ. து. சுந்தரவடிவேலு, திரு. ஆதிநாராயணன், பர். மு. வரதராசனார் ஆகியோரும் திருவாட்டி இராதாதியாகராசன், தொழிலதிபர் நா. மகாலிங்கம் முதலியவர்களுமான பெருமக்கள் பலர் கலந்துகொண்டு விழா நாயகரின் சிறப்பியல்புகளைப் பாராட்டி வாழ்த்தினர். தமிழ்நாட்டின் பல துறைப் பெருமக்கள் பலருடைய வாழ்த்துரைகளையும் தாங்கிய விழா மலரைப் பெரியார் ஈ. வே. இரா. அவர்கள் வெளியிட்டுப் பிள்ளை அவர்களின் தனிச்சிறப்புகளையும் தமக்கும் அவருக்கும் உள்ள தொடர்புகளையும் எடுத்துரைத்துப் பாராட்டி வாழ்த்தியது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு கல்வி, சமயம், தமிழிசை போன்ற பல துறைகளில் ஈடுபட்ட பிள்ளை அவர்கள் சைவசித்தாந்தக் கழகத்தின் பணிகளைப் பாராட்டவும், கழக விழாக்களில் பங்குகொள்ளவும் தவறியதில்லை. கழகம் 1940 இல் நடத்திய 'குறுந்தொகை மாநாடு', 'அகநானூற்று மாநாடு'களில் கலந்துகொண்டார். 1940 வரை தமிழ் வித்துவான் தேர்வில் முதல் வகுப்பில் தேறிய பன்னிருவர்க்குப் பரிசும் பாராட்டும் நல்கக் கழகம் நடத்திய விழாவிற்குத் திரு. பிள்ளையவர்கள் தலைமை தாங்கிப் பரிசு வழங்கினர்.

சைவசித்தாந்தக் கழகத்தின் கிளை திருச்சி மாநகரில் 4—3—74 இல் திறக்கப்பெற்றபோது அத் திறப்புவிழா நிகழ்ச்சிக்குத் திரு. பிள்ளை அவர்கள் தலைமைதாங்கி அந் நிலையத்தைத் தொடங்கி வைத்தார்.

கழகம் நடத்திவரும் மறைமலையடிகள் நூல்நிலையத்தை 24-11-65ல் பார்வையிட்ட அப் பெரியவர் "அஃது ஒரு நூல்நிலையமாக மட்டும் காட்சியளிக்கவில்லை. தமிழ் வளர்ச்சியைப் படம் பிடித்துக்காட்டும் கண்காட்சி

யாகவும் தோன்றியது. மறைமலையடிகள் பெரும் பெருமை வாய்ந்தவர் தாம். அவர் பெருமையை வெளிக்கொணர்ந்த பெருமை அன்பர் திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்களுக்கே உரியது'' என்று பாராட்டியுள்ளார்.

> "ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
> பொன்றாது நிற்பதொன்று இல்"

என்ற வள்ளுவர் வாக்கிற்கேற்பப் புகழ்பட வாழ்ந்தவர் நம் பிள்ளையவர்கள் எனில் மிகையன்று.

தமிழினத்திற்கே தலைசிறந்த வழிகாட்டியாக, தலைவராக, ஒளி விளக்காகத் திகழ்ந்த அவர்தம் மறைவு தமிழினத்திற்கேற்பட்ட பேரிழப்பாகும். அவரைப் பிரிந்து வருந்தும் அவர்தம் குடும்பத்தார்க்கு நம் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

---

## காரைக்குடியில் தமிழாய்வு நிறுவனம்

காரைக்குடியில் கம்பன் மணிமண்டபத்தை அமைத்து ஆண்டு தோறும் 'கம்பன் விழா' நடத்திவரும் கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள் 'கம்பன் தமிழாய்வு நிறுவனம்' ஒன்றை விரைவில் தொடங்க இருக்கிறார். தமிழ்ப் பண்பாடு, கட்டடக் கலை, தமிழ்க் கணக்கு, வரலாறு, வானியல், சோதிடஇயல், தொல்பொருளியல் போன்ற பல துறைகளில் உயர் மட்ட ஆய்வுகள் இம் மன்றத்தின் சார்பில் நடைபெறும். தமிழ், சமற்கிருதம், வரலாறு ஆகிய பாடங்களில் எம். ஏ. தேறிய 24 பேர் இதில் சேர்த்துக் கொள்ளப் பெறுவர். மூன்று ஆண்டுகள் ஆய்வுப் பணியில் அவர்கள் ஈடுபடும்போது உண்டியும் உறையுளும் காசின்றிப் பெறுவர். 'கம்பன் அறநிலையத்தின்' சார்பில் நடைபெறவிருக்கும் இம் மன்றத்திற்கு அதன் தலைவரான திரு. சா. கணேசன் அவர்களே தலைவராக இருப்பார்.



ஐயாயிரம் பேர் அமரக்கூடிய மணிமண்டபம் ஆயத்தமாக உள்ளது. 'தமிழ்த்தாய் கோயில்' உருவாகி வருகிறது. வள்ளுவர், இளங்கோ, கம்பன் ஆகிய மூவர்க்கும் இக் கோயிலில் தனி மண்டபங்கள் அமையும். ஏறத்தாழ 26 நூறாயிரம் ரூபாய் செலவில் உருவாகிவரும் இக் கோயிலுக்குத் தமிழக அரசு 5 நூறாயிரம் ரூபாய் நன்கொடை வழங்கியுள்ளது.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## நீதிமன்றங்களில் இந்தி

உத்தரப்பிரதேசத்தில் 1980 க்குள் எல்லா மாவட்ட நீதிமன்றங்களிலும் இந்தி கட்டாயமாக்கப்பட்டுவிடும். குற்ற உசாவல் நீதிமன்றம் (Sessions) முதலான மாவட்ட நீதிமன்றங்களில் நடுவர்கள் இந்தியில் தீர்ப்பு எழுத உ. பி. அரசு அனுமதி தந்துள்ளது. தமிழக அரசும் இதைப் பின்பற்றித் தமிழுக்கு வாய்ப்பளிக்குமாக.

## இந்திய மொழிகளில் ஐ. ஏ. எஸ் தேர்வு

ஐ. ஏ. எஸ். மற்றும் அனைத்திந்தியப் போட்டித் தேர்வுகளில் எல்லா இந்திய மொழிகளுக்கும் சிறப்பிடம் தரப்படவேண்டும் என்ற கோத்தாரி ஆணைக்குழுவின் பரிந்துரையைச் செயல்படுத்துமாறு மத்திய தேர்வு ஆணைக்குழுவை மைய அரசு கேட்டுக் கொண்டுள்ளது.

1969 முதல் பொது அறிவு, கட்டுரை ஆகிய தேர்வுகளை மட்டும் தாய் மொழியில் எழுத வாய்ப்பிருந்து வருகிறது. இனித்தேர்வு எழுதுவோர் தங்கள் விருப்பப் பாடங்களையும் தாய்மொழியில் எழுதலாம். தேர்வு எழுதும் அனைவருக்கும் சம வாய்ப்பு அளிக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் இம் மாற்றம் ஏற்றுக்கொள்ளப்பெறுகிறது. இது வரவேற்கத்தக்க முடிவு.

## திருக்குறட் செல்வன் ஈசுவரனுக்குப் பாராட்டும் பரிசும்

நெல்லை திருவள்ளுவர் கழகத்தின் ஆதரவில் அருள்மிகு நெல்லையப்பர் கோவிலில் ஊஞ்சல் மண்டபத்தில் 24—5—78 இல் திருமூலர் திருநாள் கொண்டாடப் பெற்றது. விழாவிற்கு முன்னுள், திருக்கோயில் அறங்காவலர் திரு. ப. இலக்குமணன் தலைமை தாங்கினர். விழாவில் திருக்குறள் செல்வன் ரா. ஈசுவரன், சிவஞான போதம், கந்தரனுபூதி, அபிராமியந்தாதி, நாலடியார், திருக்குறள் ஆகிய ஐந்து நூல்களில் அட்டாவதானம் புரிந்தான். அவனைப் பாராட்டித் திருக்கோயில் பொறுப்பாளர் திரு. சிவதேவ் வாழ்த்துரை வழங்கினர். சிவஞானபட்டர் அருள் வாழ்த்துக் கூறினர். விழாவிற்குப் பெருமக்கள்பலரும் தாய்மார்களும் வந்திருந்து சிறுவனை வாழ்த்தியதோடு 201 வெண்பொற்காசுகளை அன்பளிப்பாக வழங்கினர். புலவர் திரு. அ. மு. சுந்தரவிநாயகம் திருமூலநாயனர்பற்றி உரையாற்றினர். சை. சி. நூற்பதிப்புக் கழகக் கிளை மேலாளர் திரு. தி. து. பிச்சுதாயப்பன் நன்றி கூறினர்.

இங்ஙனமே தூத்துக்குடி சைவசித்தாந்த சபையில் 21-5-78 இல் நடைபெற்ற சைவசித்தாந்த மாநாட்டில் சிவஞானபோதம் திருக்குறள் அவதானம் செய்த திருக்குறட் செல்வன் ஈசுவரனுக்கு திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களால் 125 வெண் பொற்காசுகள் நன்கொடையாக வழங்கப் பெற்றன.

## கடுங் காற்றல் நெல்லைபெற்ற தொல்லை

வேனிற் காலக் கொடுமை தாங்கமாட்டாத நிலையிலிருந்த நெல்லை நகரின் ஒரு பகுதியில் எதிர்பாராத வகையில் ஏப்ரல் திங்கள் 30 ஆம் நாள் மாலை 4 மணி அளவில் வானம் இருண்டு மழை பெய்யத் துவங்கிற்று. ஆனல், குளிர்மையைக் கண்டு மகிழ்ந்த மக்கள் திடுக்கிடும் வகையில், அம் மழை பனிக்கட்டி மழையாக மாறிற்று. பனிக்கட்டிகள் விழுந்து சிதறின.

பின்னர் சூறைக் காற்றுச் சுழன்று சுழன்று அடித்தது. பெரு மரங்கள் பல சாய்ந்தன. மின் விளக்குக் கம்பங்களும் முறிந்தன. மூவர் மாண்டனர். கூரை வீடுகள் பறந்தன. சர்க்கஸ் கூடாரம் தகர்த்தெறியப்பட்டு அங்கிருந்த விலங்குகள் பேரொலி செய்தன. நகரமே இருளில் மூழ்கியது ஒரு சில மணித்துளிகளில் நகரம் நரகமாயிற்று. இவை அனைத்தும் நெல்லை நகரமே வரலாற்றில் காணாத தொல்லைகளென மக்கள் பேசிக்கொண்டனர் எனினும் மலைபோல வந்த இப் பேரிடர் திருவருளால் பனிபோல நீங்கிற்று.

## தமிழகப் புலவர் குழு 44 ஆவது கூட்டம்

தமிழகப் புலவர் குழுவின் 44 ஆவது கூட்டம் 7—5—78 ஞாயிறு காலை 10 மணி அளவில் திருச்சி மறைமலையடிகளார் மன்றத்தில் புலவர் திரு. சி. கோவிந்தராசனார் அவர்கள் தலைமையில் நடை பெற்றது. தமிழ்ப் பாதுகாப்பு, தமிழ் வளர்ச்சி தொடர்பான தீர் மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன. பர் திரு. வ சுப மாணிக்கம் அவர்களைத் தலைவராகக் கொண்ட புதிய செயற்குழு அமைக்கப் பட்டது.

## கோவையில் கோடியருச்சனை

கோவை சமரச சன்மார்க்க சங்க மண்டபத்தில் 24—5—78 முதல் 14—6—78 வரை முப்பெரு மகாமந்திரக் கோடியருச்சனைப் பெருவிழா நடைபெறுகிறது. கோடியருச்சனையை யொட்டிச் சிறப்பு வழிபாடுகளும் சமயச் சொற்பொழிவுகளும் நடைபெறுகின்றன. திருவாளர் நா. மகாலிங்கம் அவர்கள் இவ் விழாக் குழுவின் புரவல ராக விளங்குகின்றார்.

## இந்தித் திணிப்பு இல்லை; ஆனால் பரவ வழிசெய்வோம்

அண்மையில் தமிழக நிதி அமைச்சருக்கு எழுதிய கடிதமொன் றில் இந்தியத் தலைமை அமைச்சர் மாண்புமிகு மொரார்சி தேசாய் அவர்கள் "வரப் போகும் ஆண்டுகளில் இந்திய அரசு அரசியல் அடிப்படையில் கடிதப் போக்குவரத்துக்கள் அனைத்தும் இந்தி யிலேயே நடைபெறும். இந்தி திணிக்கப்படாவிடினும் அதன் பயன் மேலும் பரவலாகும்படி செய்யப்படும்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல் ௩ ௪௩௩ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் (மே 78) | 100 00 |
| உயர்திரு. ஆ சுப்பையா பிள்ளை அவர்கள் ( , ) | 5 00 |

இந் நூல்நிலையத்தில் நூற்றுக்கு மேற்பட்ட பேராசிரியர்கள் எம். லிட்., டி. லிட் பட்டங்கள் பெறப் பதிவு செய்துகொண்டு பல துறையிலும் ஆராய்ச்சி செய்து வருகின்றார்கள் கழகப் புத்தக விற்பனைக் குறைவினால் நூல்நிலையத்தை நடத்த 1976 முதல் நன் கொடை பெறத் திட்டமிட்டுள்ளோம். ஆனால் எதிர் பார்த்தபடி பயன் கிடைக்கப்பெறவில்லை என்பதைத் தமிழறிஞர்கட்கும் அன்பர் கட்கும் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

---

பவழக்காரத் தெரு கழக வீடு எண்மாற்றம்

மாநகராட்சி டி வீட்டு எண் 6ஐ 91ஆக 11—5—78இல் மாற்றியுள்ளது. இனி அவ்வாறே எழுதுக.

---

வ. சு.

# மதிப்புரை

## பாரதிதாசன் படைப்புக்களில் நகைச்சுவை

[ஆசிரியர்: அரங்க இராமலிங்கன், வெளியீடு: கற்புக்கரசி பதிப்பகம், 2, வேங்கடகிருட்டிணன் தெரு, சென்னை - 21. விலை: உருவா 5-00.]

பாவேந்தர் பாரதிதாசனார் அவர்களின் செய்யுள்களில் அமைந்துள்ள நகைச்சுவையை எடுத்து விளக்குகின்றது இந்நூல். நகைச்சுவையும் பாரதிதாசனும் என்று தோற்றுவாய் செய்துகொண்டு, பாவேந்தருடைய பாடல்கள், நாடகங்கள், கதைகள் ஆகியன பற்றியும் பாவேந்தர் படைத்துள்ள நகைச்சுவை மாந்தர் பற்றியும் திரு. இராமலிங்கன் அவர்கள் விளக்கியுள்ளார். பாவேந்தருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள் சிலவும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## புலால் தின்பது தீவினையா?

[தொகுப்பாசிரியர்: முரு. பழ. இரத்தினச் செட்டியார், வெளியீடு: மறைமலையடிகள் மன்றம், பு. புளியம்பட்டி (அஞ்) கோவை (மா. வ), விலை: உருவா 8-00]

கொல்லாமை, புலான் மறுத்தல் ஆகிய அருளறங்களை யாண்டும் பரப்பவேண்டும் என்னும் நோக்குடன் முற்காலத்தனவும் பிற்காலத்தனவுமான இருபத்தாறு நூல்களினின்றும் மேற்கோள்கள் எடுத்து விளக்கி எழுதப்பட்டுள்ளது இந் நூல். புலால் உண்பது தவறில்லை என்னும் போர் நிகழ்த்தும் தடைகள் பலவற்றுக்கு விடையிறுக்கப் பட்டுள்ளது. முற்றும் வினாவிடை வடிவில் உருவாக்கப்பட்டுள்ள இந்நூல் எளிய நடையில் சிறப்புற அமைந்துள்ளது.

## திருக்குறள் கூறும் உறுதிப் பொருள்

[ஆசிரியர்: டாக்டர் சோ. ந. கந்தசாமி, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், விலை: ரூ 8-50].

தமிழ் நூல்களும் வடமொழி நூல்களும் கூறும் மனித வாழ்க்கையின் உறுதிப் பொருள்கள் பற்றிய கருத்துக்களை பௌத்த சமண சமய நெறிகளின் அடிப்படையில் நடுநிலை நின்று ஆராய்ந்துள்ளதோடு, வள்ளுவரின் உலக நோக்கு என்ற பகுதியில் எகிப்து, பாபிலோனியா, கிரேக்கம் போன்ற மேனாடுகளின் அறக்கொள்கைகளுடன் திருக்குறளின் கருத்துக்களை ஒப்பிட்டுக் காட்டுகிறார் இந் நூலாசிரியர். பல புதிய சிந்தனைகளைத் தூண்டிவிடும் வகையில் இவ் ஆய்வு நூலைப் படைத்துள்ள ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 60, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

### கழக நிலையங்களில் கிடைக்கும்

## பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| தமிழ் இலக்கியக் கொள்கை-3 —பேராசிரியர்கள் ச.வே. சுப்பிரமணியம், அ.அ. மணவாளன் | 12 | 00 |
| அண்ணா கோவை—மணியன் | 8 | 00 |
| கலைஞரின் கவிதைகள்—கலைஞர் கருணாநிதி | 10 | 00 |
| கலைஞர் கருணாநிதியின் சிறுகதைகள் —கலைஞர் கருணாநிதி | 10 | 00 |
| எண்ணங்கள் ஆயிரம்—கவிஞர் கண்ணதாசன் | 1 | 50 |
| ஈழத்தில் தமிழ் இலக்கியம்—கா. சிவத்தம்பி | 7 | 50 |
| தமிழ்த் தாமரை—ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை | 5 | 00 |
| ஒரு மலரின் தியாகம்—கவியழகன், எம்.ஏ. | 11 | 50 |
| பௌத்தம்—சொ. ந. கந்தசாமி | 20 | 00 |
| பூமியைச் சுற்றும் ஆரியப்பட்டா—கு. ராஜாராம் | 2 | 00 |
| மாணவர்க்கு அறிவுரை—கே. எஸ். லட்சுமணன் | 3 | 00 |
| இலக்கணத் தொகை (யாப்பு, பாட்டியல்) —பேராசிரியர். ச. வே. சுப்பிரமணியம் | 34 | 00 |
| மொழிக் கட்டுரைகள்—பேராசிரியர். ச. வே. சுப்பிரமணியம் | 5 | 00 |
| செயற்கரிய செய்தோர்—பேராசிரியர் மா. பா. குருசாமி | 2 | 00 |
| மனநோயும் நீக்கும் வழிகளும் —வைத்திய மாமணி இரத்தின சண்முகனார் | 5 | 50 |
| காவிய மனைவி—கோ வி. மணிசேகரன் | 4 | 50 |
| நந்திவர்மன்— ,, ,, | 16 | 00 |
| சிறப்பு மிக்க சிவாலயங்கள்—புலவர். சி. முத்துசாமிப்பிள்ளை | 6 | 00 |
| கிறித்தவக் கவிஞர்களும் தமிழ்ப் பண்பாடும் —தயானந்தன் பிரான்சிஸ் | 8 | 00 |
| புனிதக்கரை—மா. ரா. தமிழ்ச் செல்வன் | 7 | 50 |
| இலங்கையில் தமிழ்ப் பண்பாடு —பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு | 12 | 00 |
| வரலாற்றுச் சுடர்— ,, | 12 | 00 |

### புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் நூல்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| குயில் பாடல்கள் | 4 | 90 | நாள் மலர்கள் (பாடல்கள்) | 4 | 50 |
| காதல் பாடல்கள் | 5 | 90 | தமிழுக்கு அமுதென்று பேர் | 4 | 50 |
| தேனருவி | 4 | 90 | வேங்கையே எழுக! | 4 | 50 |
| | | | ஒரு தாயின் ... மகிழ்கிறது | 4 | 50 |
| இரணியன் அல்லது இணையற்ற வீரன் (நாடகம்) | 3 | 90 | புகழ் மலர்கள் (பாடல்கள்) | 4 | 50 |

# கழகப் புதிய வெளியீடுகள்

**The Cilappatikaram**
In English by Prof. V. R. Ramachandra Dikshitar — Rs. 50

**தமிழில் எழுதுவோம்**
ஆட்சிச்சொற் காவலர் கீ. இராமலிங்கனார், எம். ஏ.
தனித்தமிழ் ஆக்கத்திற்கு வழிகாட்டும் அரிய நூல் ரூ. 7 50

## பிறபதிப்பாளரின் சில அரிய நூல்கள்

| | |
|---|---|
| A Critical Study of Civka Cintamani —Kalaikathir | 24 00 |
| Thiru Arutpa (English renderings) —A. Balakrishnan, B.A., M.L. | 5 00 |
| Glossary of Linguistics (English-Tamil) —N. Arunabharathi | 6 00 |
| Preface in the kural—K. C. Kamaliah | 20 00 |
| அறிவனார் இயற்றிய பஞ்சமரபு—மூலமும் உரையும் | 20 00 |
| இருளர் வாழ்வியல்—ஆர் பெரியாழ்வார் | 6 00 |
| தமிழக நுண்கலைகள்-வி.மி.ஞானப்பிரகாசம், க.சி.கமலையா | 10 00 |

### டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| தொன்னூல் விளக்கம் | 6 00 | கம்பன் கற்பனை | 10 00 |
| சிலம்பும் சிந்தாமணியும் | 8 00 | கம்பன் ஆய்வடங்கள் | 10 00 |
| | | ஒன்று நன்று | 8 00 |

| | |
|---|---|
| ஜெயகாந்தன் சிந்தனைகள் —கா. இரா மோகன் | 3 50 |
| நேயர் விருப்பம் —அப்துல் ரகுமான் | 5 00 |
| ஒரு பெண் போராடுகிறாள்—எம். வி. வெங்கட்ராம் | 18 00 |
| கிருஷ்ணப்பிள்ளையும் கம்பரும்—S. W. சவரிமுத்து | 6 00 |
| தீர்வு-சிறுகதைகள் ,, | 6 00 |
| குலசேகரர்—தெ. பொ மீ. | 6 00 |
| காடு—பா. செயப்பிரகாசம் | 5 00 |
| திருக்குறள் மூலமும் கட்டுரையும் -ஜைன இளைஞர் மன்றம் | 7 00 |
| வாரியார் வாக்கு—கிருபானந்தவாரியார் | 3 00 |

### பி. ஸ்ரீ. நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| கபீர்தாசரும் தாயுமானவரும் | 2 50 | இராமனும் முருகனும் | 2 50 |
| நந்தனும் திருப்பாணாழ்வாரும் | 2 50 | காந்தியும் லெனினும் | 2 50 |
| | | மாணிக்கவாசகரும் நம்மாழ்வாரும் | 3 00 |

| | |
|---|---|
| வைணவ ஆசாரியர்கள்—T. S. இராசகோபாலன் | 10 00 |

அப்பர் அச்சகம், சென்னை-1.